گناہوں کے نقصانات

# பாவத்தின் தீங்குகள்


افادات: حضرت مولانا ذوالفقار احمد نقشبندی مدظلہ العالی

ஹள்ரத் மௌலானா பீர்

**துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப்**

நக்ஷ்பந்தீ, முஜத்தீதி, தாமத் பரகாதுஹுூம்

தமிழில் : பின்து அப்தில் மஜீத்

(மௌலானா அப்துல் மஜீத் ஹள்ரத்

முஹ்தமிம், மதரஸா காஷிஃபுல் ஹுதா, சென்னை-77.)



Publisher : Mufti Shakeel Ahmed Naqshbandi

E-mail : shakeel.naqshbandi@yahoo.com

# நூல் விபரம்


| | | |
|---|---|---|
| பெயர் | : | **பாவத்தின் பாதிப்புகள்** |
| சொற்பொழிவு | : | **ஹள்ரத் மௌலானா பீர் துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப் நக்ஷ்பந்தீ, முஜத்திதீ, தாமத் பரகாதுஹுமு்** |
| தமிழில் | : | **பின்து அப்தில் மஜீத்** (மௌலானா அப்துல் மஜீத் ஹள்ரத் முஹ்தமிம், மதரஸா காஷிஃபுல் ஹுதா, சென்னை - 77.) |
| முதல் பதிப்பு | : | **ஹிஜ்ரி 1432, ஜுமாதல் ஊலா** 14 (19.04.2011) |
| இரண்டாம் பதிப்பு | : | **ஹிஜ்ரி 1432, ஜமாதுல் ஆகிர்** 23 (27.05.2011) |
| மூன்றாம் பதிப்பு | : | **ஹிஜ்ரி 1432, ஷஃபான்** 8 (10.07.2011) |
| நான்காம் பதிப்பு | : | **ஹிஜ்ரி 1432, துல் கஃதா** 03 (01.10.2011) |
| ஐந்தாம் பதிப்பு | : | **ஹிஜ்ரி 1432, துல் கஃதா** 30 (28.10.2011) |
| ஆறாம் பதிப்பு | : | **ஹிஜ்ரி 1433, ரபீவுல் ஆகிர்** 21 (15.03.2012) |
| ஒளி அச்சு கோவை | : | **மனார் கிராஃபிக்ஸ், சென்னை-77.** |
| நூல் தொடர்புக்கு | : | 9444459334, 9944874226, 9677103505 |


## சுவர்க்கம் வேண்டுமா?

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள் : உங்கள் புறத்திலிருந்து எனக்காக ஆறு விஷயங்களை பொறுப்பெடுத்துக் கொள்ளுங்கள். உங்களுக்காக நான் சுவர்க்கம் கிடைக்க பொறுப்பெடுத்துக் கொள்கிறேன்.

1) நீங்கள் பேசினால் உண்மை பேசுங்கள்.
2) வாக்குறுதி அளித்தால் அதை நிறைவேற்றுங்கள்.
3) உங்களிடம் அமானிதம் கொடுத்து வைக்கப்பட்டால் நிறைவேற்றுங்கள்.
4) உங்களது மறைவிடங்களை (மானக்கேடான செயல்களிலிருந்து) பாதுகாத்துக் கொள்ளுங்கள்.
5) உங்களது பார்வையை தாழ்த்திக் கொள்ளுங்கள்.
6) உங்களது கரங்களை (தீய செயல்களிலிருந்து) தடுத்துக் கொள்ளுங்கள். (நூல் : அஹ்மது - மிஷ்காத் பக்கம் - 415)

"ஒரு தந்தை தனது பிள்ளைக்கு அழகிய ஒழுக்கத்தை வழங்குவதை விட மிகச் சிறந்த அன்பளிப்பு வேறு ஏதும் இல்லை" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (நூல் : திர்மிதி)

گناہوں کے نقصانات

# பாவத்தின் பாதிப்புகள்

افادات: حضرت مولانا ذوالفقار احمد نقشبندی مدظلہ العالی

சர்வதேச அளவில் மிகப்பெரிய சீர்திருத்தப் பணி செய்து வரும்

ஹள்ரத் மௌலானா பீர்

## துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப்

நக்ஷ்பந்தீ, முஜத்திதீ, தாமத் பரகாதுஹுமு்

அவர்கள் கண்ணியமிக்க ஹரம் ஷரீஃபில், புனிதமிக்க ரமளானில், உம்ரா இஹ்ராம் நிலையில் ஆற்றிய உள்ளங்களைத் தட்டி எழுப்பும் சீரிய உரையும், கண்களைக் குளமாக்கும் துஆவும்.

தமிழில் : பின்து அப்தில் மஜீத்

**(மௌலானா அப்துல் மஜீத் ஹள்ரத்**

**முஹ்தமிம், மதரஸா காஷிஃபுல் ஹுதா, சென்னை-77.**


**Publisher : Mufti Shakeel Ahmed Naqshbandi**
**E-mail : shakeel.naqshbandi@yahoo.com**

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்

*சென்னை மதரஸா காஷிஃபுல் ஹுதாவின் முஹ்தமிம்* **மௌலானா அப்துல் மஜீத் ஹள்ரத்** *தாமத்பரகாதுஹும் அவர்கள் மனமுவந்து அளித்த*

## அணிந்துரை

அல்லாஹ்விற்காக சுயநலமின்றி மனத்தூய்மையோடு மார்க்கப்பணிகள், சீர் திருத்தப்பணிகள், உலகில் எங்கு, எந்த வடிவில் ஏற்பட்டாலும் அவற்றின் பின்னணி யில் அல்லாஹ்வின் நெருக்கத்தைப் பெற்ற பெரியார்கள் கண்டிப்பாக இருப்பார்கள்.

இன்று உலகம் முழுவதும் மிகப்பெரிய அளவில் சீர்திருத்தப்பணி செய்து வரும் பெரியார்களில் ஹள்ரத் மௌலானா பீர் துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப் தாமத் பரகாதுஹும் அவர்கள் குறிப்பிட்டுச் சொல்லப்பட வேண்டியவர்கள். அவர்கள் மூலம் இலட்சக்கணக்கானோர் பயன்பெற்று நேரான வழியில் பயணிக்க ஆரம் பித்துள்ளனர். மேற்கத்திய கலாச்சாரத் தாக்கம் அதிகமாகிவிட்ட இந்த சூழலில் ஹள்ரத் அவர்களின் ஆன்மிக வழிகாட்டுதல் மிகவும் இன்றியமையாதது.

அடியேன் ஹள்ரத் அவர்களை கேள்விப்பட்டிருந்தாலும் அவர்களைப் பார்த்த தில்லை. சில மாதங்களுக்கு முன்பு எனது இளைய மகள், ஹள்ரத் அவர்களின் ஒரு சொற்பொழிவை இணையத்திலிருந்து எடுத்து எனது மொபைல் போனில் ஏற்றிவிட்டார். அதை எதார்த்தமாக கேட்டேன். உண்மையில் இந்த வார்த்தை களுக்குச் சொந்தக்காரர் ஓர் இறைநேசராகத்தான் இருக்க வேண்டும் என்று என் மனம் கூறியது.

பாவம் செய்தால் ஏற்படும் அல்லாஹ்வின் மூன்று தண்டனைகளை (நகீர்-உடனடி தண்டனை, தஃகீர்-விட்டுப் பிடித்தல், குஃப்யதுத் தத்பீர் - மறைமுகமான தண்டனை) ஆச்சர்யமூட்டும் உதாரணங்களோடு ஹள்ரத் அவர்கள் அவர்களுக்கே உரிய பாணியில் கூறுவது உள்ளத்தைத் தட்டி எழுப்பி, உயிரூட்டக்கூடியதாக அமைந்துள்ளது.

இதன் மூலம் பலரும் பயனடைய வேண்டும் என்பதற்காக எனது மகள் மூலமே மொழியாக்கம் செய்யப்பட்டு பாவத்தின் பாதிப்புகள் என்ற தலைப்பில் நமது மனாருல் ஹுதா மாத இதழில் தொடராக பிரசுரிக்கப்பட்டது. எதிர்பார்த்தது போலவே வாசகர்கள் ஆர்வமுடன் படித்து பயன் பெற்றார்கள்.

இதை தனி நூலாக வெளியிடலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கும் போது தான் மேல்விஷாரம் மஸ்ஜிதே தன்யீமின் இமாம் மௌலவி அப்துல் கரீம் காஷிஃபி அவர்கள் இதை தனி நூலாக வெளியிட வேண்டிக் கொண்டார். நானும் நினைத்துக் கொண்டிருக்கிறேன் தாராளமாக வெளியிடலாம் என்றேன். முதலாவது இரண்டாவது பதிப்புகள் மிக வேகமாக தீர்ந்து உங்கள் கரங்களில் தவழும் இந்நூல் மூன்றாவது பதிப்பாகுமென்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

அல்லாஹுதஆலா இச்சிறு முயற்சியை ஏற்று இந்நூல் மூலம் பரவலான



பலன்கள் அனைவருக்கும் கிடைக்க தவ்ஃபீக் செய்வதோடு இந்நூல் வெளிவர உதவி புரிந்த அனைத்து சகோதரர்களுக்கும் நல்லருள் புரிவானாக! ஆமீன்.

அன்புடன்,

عبد المجيد

(மௌலானா) அப்துல் மஜீத் (ஹள்ரத்)

# பொருளடக்கம்

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்

# பாவத்தின் பாதிப்புகள்

*"(எந்த மனிதன் தவறிழைத்தானோ அத்தவறுடைய தண்டனையை பெற்றுக் கொள்வான்)" (அல்குர்ஆன் - 4:123)*

## தவறு, பாவம் என்பது என்ன?

இறைக்கட்டளைக்கு மாறு செய்வது மற்றும் நபி ﷺ அவர்களின் வாழ்வு நெறியை பின்பற்றாமல் தீமையின் பக்கம் செல்வது தவறாகும், பாவமாகும் மனிதன் பாவம் செய்வதால் கண்ணியமிக்க அல்லாஹ்வின் கோபத்திற்கு ஆளாகிறான், வாழ்வில் பரக்கத்-அபிவிருத்தியை இழந்து நிம்மதியற்று தவிக்கிறான், இறுதியில் வாழ்வில் தோல்வி ஏற்பட்டு நரகக் கிடங்கினருகில் சென்றுவிடுகிறான். ஆனால் அவன் நன்மை செய்வதால் கண்ணியமிக்க அல்லாஹ்வின் திருப்தியைப் பெறுகிறான். வாழ்வில் பரக்கத்- அபிவிருத்தியையும் நிம்மதியையும் பெறுகிறான். இறுதியில் வாழ்வில் வெற்றி பெற்று சுவர்க்கச் சோலையினருகில் சென்று விடுகிறான்.

எவவாறு ஒரு மரதிற்கு தன் பழத்தின் எடையின் அளவு எவ்வளவு என்று தெரியாதோ அதே போன்று மனிதனுக்குத் தன் தீமையின் அளவு எவ்வளவு என்று தெரியாது. ஷைத்தான் தீமைகளை அழகாக, அலங்காரம் செய்து காட்டுகிறான். அப்படி காட்டுவதால், தீமை செய்பவர் தீமையை செய்துவிட்டு, தான் செய்வது தீமை என்பதையும் உணராமல் இருந்து விடுகிறார். அப்படியே உணர்ந்தாலும், அத்தவறு மன்னிக்கப்பட்டுவிடும் என்று பொடுபோக்காக இருந்துவிடுகிறான்.

அல்லாஹ் கூறுகிறான் : *எவன் ரஹ்மானுடைய நல்லுபதேசத்திலிருந்து கண்ணை மூடிக்கொள்வானோ அவனுக்கு ஷைத்தானை சாட்டிவிடுவோம். அவன் அவனுக்கு இணைபிரியாத நண்பனாக இருப்பான்.* (அல்குர்ஆன் 43:36)

அவர்களுக்கு அந்நண்பன் பாவங்களை அலங்கரித்து காட்டுவான். மனிதனுக்கு மற்றவர்களின் மிகச்சிறிய பாவமும் மிகப்பெரிய பாவமாகத் தெரியும். ஆனால் தன்னுடைய மிகப்பெரிய பெரும்பாவங்களும் மிகச்சிறியதாகத்தான் தெரியும்.



## பாவம் = புற்றுநோய்

தீமைகளை புற்று நோயோடு ஒப்பிடலாம். உடலில் ஏதேனும் ஒரு பகுதியில் புற்றுநோய் ஏற்பட்டால் அதற்கு ஒரே தீர்வு (மருந்து) ஆபரேஷன் செய்து அவ்விடத்தை வெட்டி எறிந்து விடுவதுதான். அதே போன்று தீமைகளுக்கு ஒரே தீர்வு (மருந்து) அத்தீமையை அடியோடு விட்டுவிடுவது. புற்று நோய் பாதித்த அவ்வுறுப்பை ஆபரேஷன் செய்து அகற்றாவிட்டால் நோய் உடலெங்கும் பரவி உயிரையே அது குடித்துவிடும். இதே போன்று மனிதன் தான் செய்யும் தவறை உணர்ந்தும் அப்பாவத்தை விடாமல் தொடர்ந்து செய்து வந்தால் அப்பாவம் பர்வி அவனது ஆன்மாவை மரணிக்கச் செய்துவிடும்.

## மெல்லிய நூல் நங்கூரமாக!

ஆரம்பத்தில் செய்யப்படும் தவறு மெல்லிய நூலைப் போல் இருக்கும். மெல்லிய நூலை சிறு குழந்தைகள் கூட அறுத்துவிடும். காலம் கடக்க கடக்க அத்தவறு நங்கூரத்தைப் (Anchor of the Ship) போன்று ஆகிவிடும். எவ்வளவு பெரிய கப்பலாக இருந்தாலும் நங்கூரத்தைப் போட்டால் நகரவிடாமல் நிறுத்திவிடும். இதே போன்று பல பாவங்கள் மனிதனுக்குள் வேர்விட்டு நங்கூரத்தைப் போன்று உள்ளிறங்கி அவனை நகர விடாமல் செய்து விடுகிறது. பாவம் செய்வதை விட்டுவிட நினைத்தாலும் விட முடியாது. ஆகையால் எவ்வளவு சீக்கிரம் பாவங்களை வெட்டி எறிய முடியுமோ அவ்வளவு சீக்கிரம் வெட்டி எறிந்து விடவேண்டும்.

## பாவத்தின் முடிவு :

அல்லாஹுதஆலா ஒவ்வொன்றிற்கும் ஒரு குணத்தை படைத்திருக்கின்றான். நெருப்பின் குணம் சுடுவது. உலகில் அது எங்கு எந்நிலையில் இருந்தாலும் சுடும். அதே போன்று பனியின் குணம் குளிர்வது. அதுவும் உலகில் எங்கு எந்நிலையில் இருந்தாலும் குளிரும். தண்ணீருடைய குணம் ஈரப்படுத்துவது. அது உலகில் எங்கு, எப்படி இருந்தாலும் ஈரமாகவே இருக்கும். அதே போன்று பாவத்தினுடைய குணம் நிம்மதியின்றி ஆக்குவதாகும். உலகில் எங்கு, எந்நிலையில் இருந்தாலும் பாவத்தின் முடிவு நிம்மதியை குலைத்துவிடும். பெரும்பாவங்களில் ஈடுபடுபவன் எவ்வளவு பெரிய செல்வச் செழிப்பு, செல்வாக்குப் பெற்றவனாக இருந்தாலும் அவனது பாவம் அவனது மன அமைதியை குலைத்து விடும்.

**நிம்மதி மட்டும் மிஸ்ஸிங்...**

நீங்களே சில செல்வந்தர்களைப் பார்த்திருப்பீர்கள். அவர்களது சிம்மாசனம் என்ன? கண்கவர் பங்களா என்ன? விலை உயர்ந்த வாகனங்களின் அணி வகுப்புகள் ஒருபுறம், பணியாட்களின் ஓட்டம் சாட்டம் மறுபுறம், தடபுடலென உணவு வகைகள் தான் எத்தனை எத்தனை? அரட்டையடிக்க மனமகிழ் மன்றங்கள் வேறு, குளிரூட்டப் பட்ட படுக்கை அறை, அலங்கரிக்கப்பட்ட பஞ்சணைகள், அப்பப்பா...? நினைத்தவற்றை சாதிக்க முடியுமளவு செல்வச் செழிப்பு, செல்வாக்கு மிக்க அவர்களுக்கு மன அமைதி, நிம்மதி மட்டும் மிஸ்ஸிங்.

மன அமைதியின்மையால் தூக்கமின்றி தவிப்பார்கள். தூக்க மாத்திரை சாப்பிட்டு தூங்க வேண்டிய நிலையில் இருப்பார்கள். இவர்களுக்கு ஏனிந்த நிலை? வெளிப்படையாக இவர்களுக்கு எந்த பிரச்சனைகளும் இல்லையே! பாவங்களினால் தான் இவர்களுக்கு இந்நிலை என்பதை சொல்லவும் வேண்டுமா? ஏனென்றால் பாவத்தினுடைய குணம் நிம்மதியின்மை தானே!

**வாழ்க்கை ஏன் கஷ்டமானது?**

இவ்வாறு உலகில் பெரும்பாலானவர்கள் நிம்மதியின்றி தவித்துக் கொண்டிருக்கின்றனர். பணக்கார நாடுகளில் கூட யாரிடம் வேண்டுமானாலும் கேட்டுப் பாருங்கள். "Life is very Difficult" (வாழ்க்கை மிகவும் கஷ்டம்) என்று சொல்வார்கள். இரவு முழுவதும் கேளிக்கை, கூத்து ஆட்டம், பாட்டம், கொண்டாட்டம், ஆனால் ஏன் "Life is very Difficult" என்று கூறுகிறார்கள். கேளிக்கை கூத்து போன்ற பாவங்களினால் இவர்களின் மன அமைதி மடிந்து விடுகிறது. உலகில் எங்கு பாவங்கள் இருக்கிறதோ அங்கு நிம்மதி பறிபோய்விடும் என்பதை புரிந்து கொள்ள வேண்டும். ஒவ்வொரு பாவத்திலும் ஏதேனுமொரு பிரச்சனையும் சேர்ந்தே இருக்கும். பாவம் செய்யும் மனிதன் மன அமைதியுடனும், நிம்மதியுடனும் வாழ்வதை உலகில் எங்கும் காண முடியாது.

**இன்றும் அன்றும்**

இன்று போல் வசதியான வாழ்வு முன் சென்ற காலங்களில் இல்லை என்று சொல்லலாம். இன்று சாதாரண (Middle Class) குடும்பத்திலுள்ள வசதி அன்றைய மன்னர்களுக்குக் கூட இருந்ததில்லை. இன்று ஓர் ஏழையின் வீட்டில் கூட மின்சார விளக்கு எரிகிறது. ஆனால் அக்கால மன்னர்களின் மாளிகையிலேயே



மண்ணெண்ணெய் விளக்கு தான் எரிந்தது. இன்று ஏழையின் வீட்டிலும் மின் விசிறி (Fan) மூலம் காற்று வருகிறது. அக்கால மன்னர்களுக்கோ கைகளினால் தான் வீச வேண்டியதிருந்தது. இன்று ஏழைக்கு கூட குளிர்ந்த நீர் அதாவது *(Refridgerator)* ஃபிரிட்ஜின் தண்ணீர் கிடைக்கிறது. ஆனால் அக்கால மன்னர்களுக்கோ பானைத் தண்ணீர்தான் கிடைத்தது.

**ஏன்? ஏன்?**

இன்று சாதாரண மனிதன் பஸ் அல்லது கார்களின் மூலம் 50 கிலோ மீட்டர் தூர மென்றாலும் ஒரு மணி நேரத்தில் சென்று விடுகிறான். ஆனால் அக்கால மன்னர்கள் குதிரைகள், ஒட்டகங்களில் பயணித்தார்கள். ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாடு போக வேண்டுமானால், சில மாதங்கள் பயணிக்க வேண்டியிருந்தது. இன்று ஒரு விமானத்தில் ஏறி உட்கார்ந்தால் 24 மணி நேரத்தில் உலகின் இன்னொரு மூலைக்கு சென்று விடலாம். இவ்வாறு இக்காலத்தில் உள்ள வசதிகள் அக்காலத்தில் இல்லை. அதே சமயம் இக்காலத்தில் உள்ள பிரச் சனைகளும் அக்காலத்தில் இல்லை. இது ஏன்? ஏன்? இன்று மனம் போன போக்கில் செல்வது அதிகரித்து விட்டது. அதனால் வாழ்வில் பரக்கத், நிம்மதி போய் விட்டது. இது தான் காரணம்!

மக்களிடையே பணத்திற்கு குறைவில்லை. ஆனால் பிரச்சனைகள் தீர்வதில்லை. இன்று எப்படியாவது முயற்சி செய்து பிரச்சனைகள் அனைத்தையும் தீர்த்து விடவேண்டும் என்று முடிவு செய்து வீட்டிலிருந்து புறப்படுவார்கள். ஆனால் ஒன்று முடிந்தவுடன் இன்னொன்று வரும். அது முடியும் முன்னே மூன்றாவதாக அதன்பின் நான்காவதாக, இப்படி பிரச்சனைகள் வந்து கொண்டேயிருக்கும். ஒரு முத்துமாலை அறுந்து விழுந்தால் அதன் மணிகள் ஒன்றன் பின் ஒன்றாக சட சடவென கொட்டுவதைப் போன்று பிரச்சனைகள் ஒன்றன் பின் ஒன்றாக வரும் என்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

*அல்லாஹுதஆலா கூறுகிறான்: "மனிதர்கள் கரங்கள் தேடிக் கொண்ட தீய வினையின் காரணமாகக் கடலிலும் தரையிலும் தீமைகள் தோன்றிவிட்டன. (அவற்றிலிருந்து) அவர்கள் விலகிக் கொள்ளும் பொருட்டு அவர்களின் தீய வினைகளின் சிலவற்றை அவர்கள் இம்மை யில் சுகிக்கும்படி அவன் செய் கிறான்."* (அல்குர்ஆன் 30:41)

### தீய எண்ணத்தின் பாதிப்புகள்

நிம்மதியின்மை போன்ற மோசமான விளைவுகள் பாவச் செயல்களினால் ஏற்படுவதைப் போல் சாதாரணமாக மனதில் ஏற்படும் தீய எண்ணத்தினாலும் கூட பல பாதிப்புகள் உண்டாகின்றன. இதற்கு ஒரு உதாரணத்தைக் கூறலாம்.

### அரசரும் மாதுளைச் சாறும்

ஒரு அரசர் காட் டிற்கு வேட்டையாட சென்றார். கடுமையான வெயிலினால் சோர்வும் தாகமும் அவருக்கு ஏற்பட்டது. அருகிலிருந்த ஒரு மாதுளைத் தோட்டத்தினருகில் சென்று தோட்டக்காரரிடம், "எனக்கு குடிக்க ஏதாவது தாருங்கள்" என்றார். அவர் ஒரு மாதுளையைப் பறித்து சாறு பிழிந்து பெரிய குவளை நிரம்ப அரசரிடம் கொடுக்க, அதை வாங்கி குடித்த அரசர் அதன் சுவையைக் கண்டு பிரமித்து விட்டார்.

பிறகு "இப்படிப்பட்ட தோட்டம் இவரிடம் இருக்கின்றதே! இது நம்மிடம் அல்லவா இருக்க வேண்டும்" என்று நினைத்தவாறே அவரிடம் "இன்னும் ஒரு குவளை எடுத்து வாப்பா" என்றார். அல்லாஹ்வின் அந்த அடியார் சென்று இன்னொரு மாதுளையை எடுத்து சாறு பிழிந்த போது கால் குவளையே வந்தது. இன்னும் ஒரு பழத்தை பிழிந்தார். பாதி குவளை நிரம்பியது. மூன்றாவதாக ஒரு மாதுளையைப் பிழிந்த போது தான் குவளை நிரம்பியது. அரசர் அதைக் குடித்து விட்டு அத்தோட்டக்காரரிடம் முதலில் எந்த மரத்தின் பழத்தை பறித்தாயோ அதிலிருந்தே பறித்திருக்கலாமே! அந்த மரத்தின் ஒரு மாதுளையிலேயே குவளை நிரம்பிவிட்டதே! இதைவிட ருசியாகவும் இருந்ததே! என்றார்.

அதற்கு அத்தோட்டக்காரர் "அந்த மரத்திலிருந்து தான் அத்தனை பழங்களையும் பறித்தேன்" என்றார். அப்படியென்றால் ஏன் முதல் கனியை போல் மற்றவை இல்லை? என்று அரசர் கேட்க, அல்லாஹ்வின் அந்த அடியார் கூறினார், "அரசர் ஸலாமத்! தங்களின் எண்ணத்தில் ஏதும் வித்தியாசம் வந்து விட்டதோ என்னவோ, தங்களின் எண்ணத்தின் மாற்றம் என் மரத்தினுள் இருந்த பரக்கத்தை நீக்கி விட்டது" என்றார். அதற்கு மன்னர் "ஆமாம்! முதலில் என்னுடைய எண்ணம் தாகம் தீர்க்க வேண்டும் என்பதாகவே இருந்தது. பிறகு இத்தோட்டம் என்னிடம் இருக்க வேண்டுமென என் எண்ணம் மாறியவுடனேயே அல்லாஹ் இவ்விடத்தில் உள்ள பரக்கத்தை நீக்கிவிட்டான் என்றார்.



ஓர் அடியானின் சிறிய மனமாற்றம் இவ்வளவு தாக்கத்தை ஏற்படுத்துகிறதென்றால் இன்று ஒவ்வொரு மனிதரிடமும் இது போன்ற கெட்ட எண்ணங்களும் மோசடியும் நிறைந்திருக்கின்றன. ஒவ்வொருவரும் ஏதாவது ஒரு நேரத்தில் மற்றவருடைய பொருளை அபகரிக்கத் தயாராக இருக்கிறார்கள். ஏமாற்றத் தயாராக இருக்கிறார்கள். பிறகு எங்கிருந்து நிம்மதி, பரக்கத் வரும்?

### அல்லாஹுதஆலாவின் நியதி

முஸ்லிம்கள் தங்களுக்கிடையே வியாபாரம் செய்து கொள்கிறார்கள். ஆனாலும் ஒருவர் மீது ஒருவருக்கு நம்பிக்கை இருப்பதில்லை. ஒரு சிலர் பணத்தை சந்தோஷமாய் வாங்குகிறார்கள். அதே சமயம் திரும்ப கேட்கும் பொழுது கொடுக்க வேண்டுமென இருந்தேன். ஆனால் முடியவில்லை என்பார்கள். இன்றைய காலத்தில் யாரிடமாவது ஏதாவதொரு பொருளை கொடுத்து பாருங்களேன் பிறகு என்ன நிலை என்று தெரியும்? இப்படி கெட்ட எண்ணங்களோடு வாழும் வாழ்க்கையில் நிம்மதி எங்கே இருக்கும்? ஆகையால் "எந்த மனிதன் தவறு இழைத்தானோ அத்தவறுடைய தண்டனையைப் பெற்றுக் கொள்வான்." இது அகிலத்தின் இரட்சகனிடம் ஒரு நியதியாகும். அல்லாஹ்வின் ஓர் ஒழுங்கு முறை (Rule) ஆகும். இது முழு உலகிலும் விளைவுகளை ஏற்படுத்திக் கொண்டு இருக்கிறது.

சட்டம் அமைத்தவன் பலஹீனமானவனல்ல. யாருடைய தேவையும் அற்றவன். அவன் எந்த அளவிற்கு பலமானவன் என்றால், முழு உலகிலும் தான் இயற்றிய சட்டத்தை செயல்படுத்திக் கொண்டிருக்கின்றான். அத்தகைய அல்லாஹ் கூறுகிறான்: *யார் தவறு செய்வார்களோ அவர்கள் அத்தவறுடைய தண்டனையை பெற்றுக் கொள்வார்கள்.* *(அலகுர்ஆன் 4:123)*

### மூன்றில் ஒன்று : முதலாவது நகீர் ;

ஒரு மனிதனின் தவறுக்குரிய தண்டனை மூன்று விதங்களில் ஏதாவது ஒரு விதத்தில் வந்து அவனை அடையும். முதலாவது கண்ணியமிக்க அல்லாஹ் தவறு செய்பவனுக்கு உடனேயே தண்டனையை வழங்கி விடுவான். இதை "நகீர்" என்று கூறுவார்கள். நகீர் என்றால் உடனடி பதில். அதாவது அல்லாஹ்வின் புறத்திலிருந்து உடனடி தண்டனை கிடைக்கும். ஒரு சம்பவம் ஞாபகத்திற்கு வருகிறது.

### பால் வியாபாரியும் குரங்கும்

ஒரு பால் வியாபாரி, ஒரு நாள் பால் குறைவாக இருந்தது. வாங்குபவர்கள்

அதிகமாக வந்தனர். ஆகையால், அவர் பாலில் பாதிக்குப் பாதி தண்ணீரைக் கலந்து விட்டார். முழுவதையும் விற்றும் விட்டார். இரண்டு மடங்கு லாபம் கிடைத்தது. மிகவும் சந்தோஷமானார். "இன்று நான் இரண்டு மடங்கு லாபம் சம்பாதித்து விட்டேன், வீட்டில் நல்ல வரவேற்பு இருக்கும் என்று எண்ணிக்கொண்டு வீடு நோக்கி நடக்கலானார். மிகவும் களைப்பாக இருந்ததால் வழியில் ஓரிடத்தில் ஓய்வெடுத்தார். அவர் தூங்கிய சிறிது நேரத்தில் அருகிலிருந்த மரத்திலிருந்து ஒரு குரங்கு அவருடைய பொற்காசுகளின் பையை எடுத்துக் கொண்டு மீண்டும் மரத்திலேறி உட்கார்ந்து கொண்டது.

இவர் கண் விழித்துப் பார்த்த போது பணப்பையைக் காணவில்லை. இங்கும் அங்கும் தேடினார். சட்டென அருகிலிருந்த மரத்திற்கு அவரது பார்வை சென்றது. அங்கு உயரத்தில் அந்தக் குரங்கு அமர்ந்திருந்தது. அது இவரைப் பார்த்தது. இவர் அதைப் பார்த்தார். பையை தன்னிடம் தூக்கிப் போடுமாறு அக்குரங்கிடம் சைகை செய்தார். பிறகு இவர் தன்னிடமிருந்த துணியை விரித்துக் காட்டினார். அவர் தூங்கிய இடமோ நதிக்கரையோரமாக இருந்தது. மிகவும் பதட்டத்துடன் பார்த்தார். அப்போது அந்தக் குரங்கு நிதானமாக தீனார் (பொற்காசுப்) பையைத் திறந்து ஒரு தீனாரை எடுத்து இவரது மடியில் வீசியது. இன்னொன்றை நதித் தண்ணீரில் வீசியது. இப்படியே தீனார்ப்பையை காலி செய்தது. பாதி தீனார் அவரிடம், பாதி அத் தண்ணீரில். அவர் படிப்பினை பெற்றார். பிறகு அல்லாஹ் விடம். யா அல்லாஹ்! இன்றிலிருந்து நான் ஏமாற்றிப் பணம் சம்பாதிக்க மாட்டேன் என்று தவ்பா செய்தார்.

## பாவங்களின் மற்றொரு குணம் பரக்கத்தின்மை

எவ்வளவு வேகமாக இந்தப் பணம் வருகிறதோ அதே வேகத்தில் இது கையிலிருந்து சென்றுவிடும். பாவங்களின் இன்னொரு குணம் என்னவென்றால் இது மனிதனை ஒவ்வொரு நிமிடமும் பிரச்சனைகளில் ஆழ்த்திக் கொண்டேயிருக்கும். இதனால் பரக்கத்தில்லாமல் போகிறது. பரக்கத்தில்லாமல் போவதால் நமது தேவைகள் நிறைவேறுவதில்லை. பணம் எங்கு போகுமென்றே தெரிவதில்லை. நமது நண்பர்கள் பலர் சொல்கிறார்கள், ஹள்ரத்! காசு வருவது தெரிகிறது. ஆனால் எங்கு போகிறதென்றே தெரிவதில்லை, அவ்வளவு செலவாகிறது. இதற்கு காரணம் பரக்கத் நீங்கி விடுவது தான்.

ஐரோப்பிய நாடுகளுக்கு பயணம் செய்த அனுபவத்தில் பார்த்திருக்கின்



றோம். வீட்டிலுள்ள அத்தனை ஆண்களும் அத்தனை பெண்களும் வேலைக்கு செல்வார்கள், ஆனாலும் அவர்களின் செலவுகள் பூர்த்தியடைவதில்லை. இது எதனால்? இதைத் தான் பரக்கத்தின்மை என்று கூறுவார்கள். ரிஸ்கிலிருந்து அல்லாஹ் பரக்கத்தை எடுத்து விடுகிறான்.

## ஸஹாபியின் "பில்"லும் நமது "பில்"லும்

ஒரு ஸஹாபியின் சம்பவம் ஞாபகம் வருகிறது. அவர்கள் தன் காலைக் கடனை முடிப்பதற்காக வெளியில் சென்று ஓரிடத்தில் தன் தேவையை பூர்த்தி செய்துவிட்டு எழுகையில் அவர் பார்த்தார். மண்ணில் ஓர் ஓட்டை இருந்தது. உருது மொழியில் அதை பில் (எலிவலை) என்று கூறுவார்கள். அதிலிருந்து ஒரு எலி வந்தது. அதன் வாயில் ஒரு தீனார் இருந்தது. அதை வெளியில் தூக்கி யெறிந்து விட்டு உள்ளே சென்று விட்டது. சிறிது நேரம் சென்று, திரும்பவும் வெளியில் வந்து இன்னொரு தீனாரை தூக்கி எறிந்து விட்டுச் சென்றது. எத்தனை முறை அவர் எழ நினைத்தாரோ அத்தனை முறையும் ஒவ்வொரு தீனாராக தூக்கி எறிந்தது. இவ்வாறு எழுபது தீனார் சேர்ந்து விட்டது.

இந்த ஸஹாபி அந்த தீனார்களை எடுத்துக் கொண்டு நபி ﷺ அவர்களிடம் ஆஜரானார்கள். "அல்லாஹ்வின் நபியவர்களே! எனக்கு இப்படி ஒரு சம்பவம் நடந்தது. இந்த தீனாரை உபயோகிக்கலாமா? அல்லது யாரிடமாவது கொடுத்து விடவா? என்ன செய்வது?" என்று கேட்டார். நபியவர்கள் "இது உங்களுடைய ரிஸ்க். உங்களுக்கான ரிஸ்கை அல்லாஹு தஆலா தன்னுடைய படைப்பினங்களின் மூலமாக தங்களுக்கு வழங்கியுள்ளான்" என்றார்கள்.

நான் எப்பொழுது இந்த ஹதீஸுடைய சம்பவத்தைப் படித்தாலும் மிகவும் ஆச்சர்யப்பட்டு யோசிக்கின்றேன். யாஅல்லாஹ்! ஸஹாபாக்களுடைய வாழ்க்கையும் நமது வாழ்க்கையும் எவ்வளவு வித்தியாசப்படுகிறது. அவர்களுக்கு பில் (எலிவலை யி)லிருந்து ரிஸ்க் கிடைத்தது. ஆனால் நாம் மாதம் முழுவதும் சம்பாதித்த பணம் பில்லிலேயே செலவாகி விடுகிறது. கரண்ட் பில், டெலிபோன் பில், இன்சூரன்ஸ் பில், கேஸ் பில், இப்படி பில்லாக கட்டி நமது தில் (மனது) பாதித்து சஞ்சலம், பிரச்சினை தொத்திக் கொள்கிறது. மேலும் மேலும் கஷ்டம் சேர்ந்து விடுகிறது. பரக்கத் இல்லாமல் போய்விடுகிறது.

ஆகையால் இன்று நமது ரிஸ்கில் பரக்கத்தை எவ்வாறு கொண்டு வருவது என்றால் இதற்காக நாம் தீமைகளிலிருந்து விலகி நம்மை காப்பாற்றிக் கொள்ள

வேண்டும். மீண்டும் நாம் தீமை செய்தால் பரக்கத்தின்மை வந்துவிடும். பிறகு நாம் அழுது புலம்பித் திரிவோம். எவ்வளவு அதிகமாக சம்பாதிக்கின்றோமோ அல்லாஹுதஆலா நமது தேவைகளையும் ரப்பரைப் போன்று இழுத்துக் கொண்டே போவான். நமது தேவைகள் முழுமையடையவே அடையாது. இதற்கு ஒரே ஒரு தீர்வு நமது வாழ்வில், ரிஸ்க்கில் பரக்கத் வரவேண்டும்.

### பரக்கத் என்றால் என்ன?

பரக்கத் என்றால் என்ன? பரக்கத் என்னவென்றால் தன்னிடம் என்ன இருக்கின்றதோ அதைக் கொண்டு தனது தேவைகள் அனைத்தும் மற்றவருடைய உதவி சிறிதும் இல்லாமல் பூர்த்தியடைய வேண்டும். இதை பரக்கத் என்று கூறுவார்கள்.

### ஒரு பெண்மணியின் புகார்

ஒரு முறை அடியேன் வீட்டில் நண்பர்களுடன் விருந்தாளிகள் அறையில் முராக்கபா செய்து கொண்டிருக்கும் போது வீட்டின் உள்ளிலிருந்து செய்திவந்தது. "தாங்கள் உடனடியாக உள்ளே வரவும் ஒரு பெண்மணி வந்திருக்கிறார். அவர் அழுகிறார். பார்த்தால் மிகவும் துக்கமுடையவராய் தெரிகிறார்". நான் வீட்டிற்குள் சென்று அப்பெண்மணியை திரைக்குப் பின்னால் உட்கார வைத்துக் கேட்டேன் "அம்மா! தாங்களுக்கு என்ன பிரச்சனை? தாங்கள் ஏன் இவ்வளவு நிம்மதியின்றி தவிக்கிறீர்கள்? ஏன் இவ்வளவு சோகமாக இருக்கிறீர்கள்?"

### எல்லாம் இருக்கின்றன... ஆனால்...

உடனே அவர் சென்னார், "பிரபலமானதொரு பெரிய நகரத்திலிருந்து வந்திருக்கிறேன். ஒரு பெரிய செல்வந்தரின் மனைவி, என் கணவர் எத்தனையோ கம்பெனிகளின் சேர்மன், நாங்கள் இருவரும் உறவு முறைதான் என்றாலும் ஒருவரை ஒருவர் விரும்பி திருமணம் செய்து கொண்டோம். வீட்டினுள் வேலைக்கு, சமையலுக்கு, செக்யூரிட்டிக்கு என எல்லாவற்றிற்கும் ஆள் வைத்திருக்கிறார். கார் டிரைவர், தோட்டக்காரர் என எல்லாவற்றிற்கும் ஆள் உண்டு.

அவர் என்னை மிகவும் நிம்மதியாக வைத்திருக்கிறார். எல்லா விதமான நிஃமத்தோடு வைத்திருக்கிறார். வீட்டினுடைய எல்லா செலவுகளுக்கும் அவ்வரே பணம் கொடுக்கிறார். திருமணமாகி ஏழு வருடங்களாகிறது. குழந்தை பாக்கியம் இல்லை. ஆனால் எனது பிரச்சனைக்கு காரணம் இதுவல்ல. என்னைக் கொண்டு என் கணவரும் அவரைக் கொண்டு நானும் சந்தோஷமாகவே இருக்கி



றோம். அல்லாஹ் நாடும் பொழுது குழந்தையைக் கொடுப்பான்" என்றார்.

அப்படி என்றால் தங்களின் பிரச்சனை தான் என்ன? என்று நான் கேட்டேன். அதற்கு அவர் சொன்னார். "என்னுடைய கணவர் ஒவ்வொரு மாதமும் என் சொந்த செலவுக்காக 2000 டாலர் (சுமார் 93,000 ரூபாய்) பணம் கொடுக்கிறார். ஆனால் என்னுடைய தேவைகள் பூர்த்தியாவதில்லை. இது எப்படி முடியும்? என்று கூறி அழ ஆரம்பித்து விட்டார். யா அல்லாஹ்! ஒரு பெண்ணுக்கு அவர் கணவர் சொந்த செலவுக்காக 2000 டாலர் கொடுக்கிறார், அது போதவில்லை என்று இவர் அழுகிறாரே! என்று மனதில் கூறிக்கொண்டு சரி அழட்டும் என்று நாம் விட்டு விட்டோம். பிறகு கூறினேன். "அம்மா! நீங்கள் விரும்பினால் இதற்கு ஒரு தீர்வு கூறட்டுமா?" என்றேன். சரி சொல்லுங்கள் என்றார்.

### ஒருவரின் மாத செலவுக்கு 4000 டாலர் போதாதா?

"நீங்கள் நினைக்கிறீர்கள் உங்களுக்குக் கொடுக்கப்படும் பணம் குறைவாக இருப்பதால் உங்கள் தேவைகள் நிறைவேறவில்லை என்று, ஆனால் தங்களின் கணவர் 2000 (சுமார் ரூ. 93,000) க்கு பதில் 4000 டாலர் (சுமார் ரூ. 186,000) கொடுத்தாலும் தங்களின் தேவை முழுமையாக நிறைவேறாது என்று கூறினேன். இந்த பதிலைக் கேட்டவுடன் மிகவும் அதிர்ச்சியடைந்து பீர் சாஹிப்! நீங்களே இப்படி கூறக்கூடாது என்றார். எது உண்மையோ அதைத் தங்களிடம் கூறித்தான் ஆகவேண்டும் என்றேன். பிறகு அவர் ஹள்ரத் 4000-தில் எனது தேவைகள் எப்படி நிறைவேறாமல் போகும்? என்று கேட்டார்.

அம்மா! வாழ்க்கைக்கு ஒரு சில ஒழுக்கமுறை உண்டு. அந்த ஒழுக்க முறையைக் கொண்டு அல்லாஹுதஆலாவின் உதவியும், பரக்கத்தும் கிடைக்கின்றது. உங்களிடம் அந்த ஒழுக்கமுறை இல்லை. நீங்கள் படித்த, மிகப் பெரிய குடும்பத்தைச் சேர்ந்த பெண். பர்தாவுடைய கவலையில்லை. தொழுகையின் கவலையில்லை. ஹலால், ஹராமின் கவலையில்லை. சில நேரம் அந்தக் கூட்டத்தில், சில நேரம் இந்தக் கூட்டத்தில் என்று வாழ்கிறீர்கள். எத்தனை வருடங்கள் அல்லாஹுதஆலா வின் கட்டளைகளை இப்படி உடைத்துக் கொண்டு திரிவீர்களோ நபியவர்களின் சுன்னத்துக்களை விட்டுவிட்டு திரிவீர்களோ அதுவரை அல்லாஹுதஆலா தங்களின் நெஞ்சங்களில் நிம்மதியை வரவிடமாட்டான், உங்களுக்கு நிம்மதி கிடைக்கவே கிடைக்காது.

நீங்கள் உங்கள் வாழ்க்கையின் நடைமுறையை மாற்றுங்கள், எப்படி

இஸ்லாம் இருக்கச் சொல்கின்றதோ அதாவது பெண்கள் பர்தாவுடன் இருக்க வேண்டும், தொழுகையைக் கடைபிடிக்க வேண்டும், வீட்டினுள் இருக்க வேண்டும், இதுபோன்ற எல்லா விஷயங்களையும் கடைப்பிடிக்க ஆரம்பியுங்கள். பிறகு பாருங்கள் உங்கள் மனதை அல்லாஹ் அமைதியடையச் செய்வான் என்றேன். அல்லாஹ்வின் அருளால் அந்த நேரம் கபூலாகக் கூடிய நேரமாயிருந்தது. அந்தப் பெண்மணியின் மனதில் இவ்விஷயங்கள் சென்று அமர்ந்து விட்டன.

அப்பெண் கூறினார், இப்பொழுது நான் எவ்வாறு தவ்பா செய்ய வேண்டுமென நீங்களே கூறுங்கள் என்றார். பிறகு அடியேன் தவ்பாவுடைய கலிமாவை சொல்லிக் கொடுத்தேன். பிறகு சில திக்ரு, தஸ்பீஹாத்துக்களை சொல்லிக் கொடுத்து ஃபர்ளின் படி அமல் செய்வது எப்படி என்று புரிய வைத்தேன். சிறிது நேரம் கழித்து அப் பெண்மணி விடைப்பெற்று சென்று விட்டார்.

**மூன்றே மாதத்தில்...**

மூன்று மாதங்கள் கழித்து அப்பெண் தொலைப்பேசியில் அழைத்துக் கூறினார். பீர் சாஹிப்! நான் உங்களிடம் ஒரு விஷயம் கூற வேண்டும். நான் தங்களை சந்தித்து விட்டு வீடு திரும்பியதும் நான் நல்ல, சிறப்பான மௌலவி ஆகிவிட்டேன் என்று என் கணவர் கூறுகிறார், நீ நல்ல பீர் சாஹிபிடம் துஆ வாங்கி வரச் சென்றாய், நான் உன்னை மௌலவி ஆவதற்காக அனுப்பவில்லையே என்கிறார்.

பிறகு அப்பெண் மணி கூறினார், நான் பர்தாவும் போடுகிறேன். தொழுகவும் செய்கிறேன். சில நேரங்களில் தஹஜ்ஜுத்துடைய நஸீபும் கிடைக்கின்றது. தஸ்பீஹாத்தும் செய்கின்றேன். பிறகு உங்களிடம் முக்கியமான விஷயம் கூற வேண்டும். அது என்னவென்றால், நான் மிகவும் நிம்மதியான அமைதியான வாழ்க்கை வாழ்கிறேன். என்னே ஆச்சர்யம்! என்னுடைய தேவைகள் ஐநூறு டாலர்களில் முடிந்து விடுகிறது. ஒவ்வொரு மாதமும் 1500 டாலர் ஏழைகளுக்கும், தேவையுள்ளவர்களுக்கும் கொடுக்கின்றேன் என்றார்.

**இதுதான் பரக்கத்!**

அல்லாஹ்வின் கட்டளைக்கு மாறான வாழ்க்கை இருந்தவரையில் அவ்வளவு பெரிய தொகையும் பிரச்சனைகள் தீர காரணமாய் அமையவில்லை. அதே சமயம் அல்லாஹ் கூறிய அடிப்படையில் வாழ்க்கை அமைந்தபின் அல்லாஹ்வின் பரக்கத் இறங்க ஆரம்பித்தது. அதன் பிறகு மிகச் சிறிய தொகையில்



தேவைகள் நிறை வேறின. மீதம் அல்லாஹ்வின் பாதையில் செலவு செய்யப்பட்டது. இதுதான் பரக்கத்! ஆகையால் சகோதரர்களே! அல்லாஹ்வின் கட்டளைகளுக்கு மாறு செய்து கொண்டிருக்கும் வரை நிச்சயமாக மனதில் நிம்மதி ஏற்படாது.

**இரண்டு நோய்கள்**

இன்று பெரும்பாலோரிடமும் சில பிரச்சனைகள் இருந்து கொண்டே இருக்கும். அவர்களின் மனதில் ஒருவித பயம் இருக்கும். இதை Fear of unknown (இனம் புரியாத பயம்) என்பார்கள். என்ன பயம் என்றே தெரியாது. ஆகையாலேயே இவ்வுலகில் இரண்டு நோய்கள் மிகவும் அதிகமாக உள்ளன. ஒன்று Depression (மன அழுத்தம்) இன்னொன்று Tension (இறுக்கமான நிலை). சிலர் Depression-ஆல் பாதிக்கப்பட்டிருப்பார்கள் சிலர் Tension-ஆல் பாதிக்கப்பட்டிருப்பார்கள். டாக்டர்களின் வேலை இலேசாகிவிட்டது. டாக்டர்களுக்கு என்ன நோய் என்று தெரியவில்லை என்றால் இது Depression-ஆல் அல்லது Tension-ஆல் என்று கூறிவிடுகிறார்கள்.

**இவ்விரண்டும் எங்கிருந்து வந்தன?**

இவை இரண்டும் ஆங்கில மொழியின் வார்த்தைகளாகும். உர்து மொழியில் கூட இவை இரண்டையும் ஆங்கிலத்திலேயே உபயோகிக்கப்படுகின்றன. இதற்காக தனி வார்த்தைகள் உர்து மொழியில் இல்லை. இதிலிருந்து தெரிவது என்னவென்றால் நமது பெரியார்களின் வாழ்வில் Depression-னும் இல்லை Tension-னும் இல்லை. இவற்றிற்காக தனி உர்து வார்த்தைகள் அமைக்க வேண்டும் என்ற அவசியமே அவர்களுக்கு ஏற்படவில்லை. அப்படி ஏதும் ஒரு நிலை ஏற்பட்டிருந்தால் பெயர் வைத்திருப்பார்கள் அல்லவா? இப்படிப்பட்ட நிலை நமது வாழ்வில் நாம் மாற்றார்(ஆங்கிலேயர்)களுடைய வாழ்வு முறையை பின்பற்ற ஆரம்பித்ததிலிருந்து தான் ஆரம்பித்தது என்பதை வசமாக மறந்து விடுகிறோம்.

முதலில் முஃமினாகுங்கள், முஃமினுக்கு Depression-னோடும் Tension-னோடும் என்ன தொடர்பு? நினைவில் வையுங்கள், எவருக்கு அல்லாஹ்வோடு தொடர்பிருக்கிறதோ அவருக்கு நிம்மதியற்ற நிலையோடு சிறிதும் தொடர்பில்லை.

ஏனெனில் அல்லாஹு தஆலா கூறுகிறான் *"அறிந்து கொள்ளுங்கள் அல்லாஹ்வின் நினைவு கொண்டு மனங்கள் நிம்மதி பெறுகின்றன."*

(அல்குர்ஆன் 13:28)

மன அமைதி எங்கு இருக்கிறது தெரியுமா? இவ்வுலகில் இல்லை. செல்வத்தில் இல்லை, வீட்டில் உள்ள மகிழ்ச்சியில் இல்லை, மன அமைதி அல்லாஹ்வின் நினைவில் உள்ளது. அல்லாஹ்வை திக்ரு செய்வதில் உள்ளது.

### சூடேற்றும் மெழுகுவர்த்தி

எனது சிறிய வயதில் பார்த்த நிகழ்வு ஒன்று இப்பொழுது நினைவிற்கு வருகிறது. நான் எனது பெரிய சகோதரருடன் ஒரு வலீமாவிற்கு சென்றிருந்தேன். அந்த வலீமா ஒரு ஃபோர் ஸ்டார் ஹோட்டலில் நடந்தது. நாங்கள் இருவருமே சிறியவர்கள். அப்பொழுதுதான் ஒரு விஷயத்தை நாங்கள் புதிதாக பார்த்தோம். அது என்னவென்றால் மிகப் பெரிய டிரேக்களில் சாப்பாடு வைக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு டிரேக்களின் கீழேயும் ஒரு மெழுகுவர்த்தி ஏற்றி வைக்கப்பட்டிருந்தது. ஒரு புதிய விஷயத்தை பார்த்ததும் சிறார்களுக்கு கேள்வி கேட்கத் தோன்றும். நாங்களும் கேட்டோம். அவர்கள் கூறினார்கள் "சாப்பாடு பரிமாறுவதற்கு இரண்டு, மூன்று மணி நேரங்களாகும். அவ்வளவு நேரம் வரை இந்த மெழுகுவர்த்தி சாப்பாட்டை சூடாக வைத்திருக்கும் என்றார்கள்.

சிறு வயதில் நடந்த அந்நிகழ்ச்சியின் மூலம் இன்றும் உணர்கிறேன். அதாவது எந்த மனிதன் அல்லாஹ் அமைத்த வாழ்வு முறையை மாற்றி வேறு முறையில் வாழ ஆரம்பிக்கின்றானோ அவனுடைய வாழ்வில் அல்லாஹ் பிரச்சனைகளின் மெழுகு வர்த்தியை ஏற்றி விடுகிறான். அது அவனை சூடாகவே வைத்திருக்கும். அவன் இஷ்டத்திற்கு வாழ்வான். அவனது மனைவி மெழுகுவர்த்தியாகி விடுவாள். இவன் சூடாகுவான். சில நேரம் பயணங்களின் மூலம், சில நேரம் உடல் நலத்தின் மூலம் அவனுக்கு சூடு கிடைத்துக் கொண்டே இருக்கும். ஏதாவது ஒரு காரணம் மூலம் அல்லாஹுதஆலா அம்மனிதனை சூடாக நிம்மதியற்ற நிலையில் இருக்குமாறு உண்டாக்கி விடுகிறான். நிம்மதி கிடைக்காது.

### எனது பெயரை மாற்றிடுங்கள்

நாம் அல்லாஹ்வின் கட்டளைகளுக்கு மாறு செய்வோமானால் அல்லாஹ் நம்மை நிம்மதியாக தூங்கவிட மாட்டான். ஆகையால் நமது பெரியவர்களில் ஒருவர் கூறினார்"நண்பர்களே! என்ன செய்ய வேண்டும் என்று தோன்றுகிறதோ அதை செய்யுங்கள், உங்கள் விருப்பப்படி வாழுங்கள். ஆனால் அல்லாஹ் உங்களுக்கு இந்த உலகிலேயே நரகத்தின் நெருப்புடைய சுவையை உணர



வைக்காவிட்டால் எனது பெயரை மாற்றிடுங்கள். உண்மையில் நெருப்புதான் எரிந்து கொண்டிருக்கிறது. ஒவ்வொரு நேரமும் Frustration (ஏமாற்றம், விரக்தி) வியாபாரத்தைக் கவனிக்க முடிய வில்லை. அவன் ஏமாற்றிவிட்டான், இவன் ஓடிவிட்டான், தொழிலை சமாளிக்க முடியவில்லை, அது மூழ்கிவிட்டது, இது படுத்துவிட்டது. என்பதுதான் ஏற்படும்.

### அவனுக்கு பறிக்கவும் தெரியும்

ஒரு சிலர் சொல்கிறார்கள் ஹள்ரத், ஒரு காலம் இருந்தது மண்ணைத் தொட்டால் பொன்னானது. ஆனால் இன்று பொன்னைத் தொட்டால் மண்ணாகிறது இது எதனால்? அல்லாஹ்வின் கிருபையான, ரஹ்மத்தான பார்வை அகன்று விட்டது தான் காரணம். அப்பொழுது மனிதன் உயரத்திலிருந்து கீழே விழுந்து தாழ்ந்து விடுகிறான். பல லட்சாதிபதிகளை, கோடீஸ்வரர்களை பார்த்திருக்கிறோம். அல்லாஹ்விற்கு பிடிக்காத, தரம் தாழ்ந்த சொற்களை சொல்லியிருப்பார்கள், அல்லாஹ் அவர்களை தாழ்த்தி விடுகிறான். ஒன்றை மட்டும் புரிந்து கொள்ளுங்கள் எந்த படைத்தவனுக்குக் கொடுக்கத் தெரியுமோ அவனுக்கு கொடுத்ததை பறிக்கவும் தெரியும்.

### அது என்ன "ஏதோ போகுது?...

ஆகையால் அல்லாஹ் கொடுத்துவிட்டான் என்று மன ஆறுதலடையாமல் அவனுக்கு நன்றி செலுத்தி அவனை திருப்திபடுத்துமாறு வாழுங்கள். அவன் முன்னால் சிரம் தாழ்த்துங்கள். அவனுக்கு அதிகம் நன்றி செலுத்துங்கள். ஆனால் இன்றைய நிலை என்னவென்றால், தன் வீட்டிற்கு செலவழித்தது போக மேலும் 50 வீடுகளுக்கு செலவழிக்க முடியும். அப்படிப்பட்ட உயர்ந்த தொழில் இருந்தும், யாராவது தொழில் எப்படி போகுது என்று கேட்டால் "ஏதோ போகுது" என்பார்கள். இப்போது சொல்லுங்கள் இந்த "ஏதோ போகுது" என்கிற வார்த்தையால் நாம் அல்லாஹ்வை கோப்படுத்தவில்லையா என்ன?

சகோதரர்களே! நீங்கள் ரூ. 500 தேவையுடைய மனிதருக்கு மாதம் 5000 ரூபாய் கொடுக்கிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். வேறு யாராவது அந்த மனிதரிடம் "எப்படி போகுது வாழ்க்கை" என்று கேட்க அவர் ஏதோ போகுது என்று சொன்னால் உங்களுக்கு கோபம் வருமா வராதா? நீங்கள் கூறுவீர்கள் ஏனப்பா உன்னுடைய தேவையை விட 10 மடங்கு அதிகமாக கொடுக்கிறேன். ஆனால் நீ இன்னமும் முகத்தை சோகமாக்கிக் கொண்டு ஏதோ போகுது என்கி

றாயே" என்று தானே கேட்பீர்கள்?

யாராவது நம்மிடம் எப்படிபோகுது தொழில்? என்று கேட்டால் அல்ஹம்து லில்லாஹ்! கிருபையாளனின் கிருபையால் என் ரஹ்மானுடைய இரக்கமான பார்வையால் அல்லாஹ், என் தேவைகளை விட அதிகமாகவே எனக்கு கொடுத் திருக்கிறான் என்று நாம் ஏன் கூறுவதில்லை? எப்பொழுது நாம் இவ்வாறு கூறு வோமோ, அப்பொழுது அல்லாஹ்வின் ரஹ்மத்திற்கு நம்மீது அன்பு ஏற்படும். அல்லாஹ்வின் நிஃமத்தை எவர் கண்டுக் கொள்ளவில்லையோ அவரிடமிருந்து கொடுத்த நிஃமத்தை அல்லாஹ் திரும்பப் பிடிங்கிக் கொள்வான். எவர் அதைக் கண்டு கொண்டு நன்றி செலுத்துவாரோ அவருக்கு மென்மேலும் நிஃமத்தை அதிகரிப்பான்.

## மூன்று வித தண்டனைகள்

பாவங்களுக்கு தண்டனை மூன்று விதங்களில் கிடைக்கும். **முதலாவது நகீர்** என்பதாகும். அதாவது நாம் தவறு செய்தால் உடனடி பதில் கிடைக்கும் என்று கூறினேன். எனது சில நண்பர்கள் கூறுவார்கள் "ஹள்ரத்! நாங்கள் உல்ட்டாவாக, தவறாக ஏதாவது சில காரியம் செய்தால் 24 மணி நேரத்தில் அதனுடைய பதிலடி எங்களை வந்தடைகிறது என்பார்கள்." இதை நகீர் என்று சொல்லப்படும்.

ஹள்ரத் ஹுஜைர் பின் யாத் (ரஹ்) கூறுகிறார்கள் : நான் எப்பொழுதெல் லாம் அல்லாஹ்வின் கட்டளைகளை மீறுவேனோ அப்பொழுதெல்லாம் அதனு டைய தாக்கத்தை என்னுடைய மனைவி, எனது பிள்ளைகள் அல்லது வேலை யாட்கள் அல்லது நான் சவாரி செய்யும் மிருகங்களின் மீது பார்ப்பேன். எப்பொ ழுது அல்லாஹ்வின் கட்டளையை மீறுவேனோ அப்பொழுது எனது பொறுப்பின் கீழுள்ளவர்களில் யாரேனும் ஒருவர் எனது கட்டளையை மீறுவார் என்று கூறுகிறார்கள்.

## அம்மாவின் அடியைப் போல்...

கவனியுங்கள், இன்று நமது மனைவிமார்கள் நமது பேச்சைக் கேட்கவில்லை யென்றால் இது அல்லாஹ்வின் உடனடி தண்டனையாக இருக்கலாமல்லவா? இன்று நமது பிள்ளைகள் நமது கட்டளைகளை மீறுகின்றன என்றால் இதுவும் அல்லாஹ்வின் உடனடி தண்டனையாக இருக்கலாமல்லவா? நமது தொழில் கூட்டாளி நமக்கு துரோகம் செய்கிறாறென்றால் அல்லாஹ்வின் உடனடி தண்ட னையாக இருக்கலாமல்லவா? இதை நகீர் என்று கூறுவார்கள். தவறு செய்தால்



உடனடி தண்டனை கிடைக்கும். சிறுபிள்ளைகள் தவறு செய்தால் உடனே தாயிட மிருந்து அறை விழும். அது கோபமல்ல, பிள்ளை மீதுள்ள தாயின் பரிவாகும். இனி இவ்வாறு நீ செய்யக்கூடாது என்று புரிய வைப்பதாகும். அது போன்று தான் நகீர் - உடனடி தண்டனையும். இது அல்லாஹ்வின் ரஹ்மத்தாகும்.

## கண்கள் திறக்கவே

ஆகையால் அல்லாஹ் இதுபோன்ற உடனடி தண்டனைகளைக் கொடுத்து தனது அடியானை காக்கிறான். அவனை நேர்வழியில் நடக்கச் செய்கிறான். இது அல்லாஹ்வின் அருட்பார்வையாகும். அல்லாஹ்வை மறந்திருக்கும் பொழுது ஏதாவதொரு சம்பவத்தின் மூலம் அவனை நினைவுக்கொள்ளச் செய்கிறான். ஒரு சில நேரங்களில் நம்மை சுற்றி பிரச்சனைகளும் கஷ்டங்களும் சூழுமல் லவா? இது அல்லாஹ் தனது அடியானின் கண்கள் திறக்க வேண்டும், தன்னை நோக்கிவர வேண்டும் என்பதற்காக இப்பிரச்சனைகளையும் கஷ்டங்களையும் கொடுக்கிறான்.

ஒரு விஷயத்தை நினைவில் வையுங்கள் "இன்பங்கள் உறங்க வைக்கும் துன்பங்கள் விழிக்க வைக்கும்." எப்பொழுது மனிதனுக்கு துன்பம் வருகிறதோ அப்பொழுது அல்லாஹ் ஞாபகத்திற்கு வருவான். ஃபர்ளு தொழுகை கூட தொழாதவர் துன்பம் வந்தவுடன் ஃபர்ளிற்கு பிறகு இஷ்ராக், அவ்வாபீன் என நஃபில்களைக் கூட விடாமல் தொழுவார். ஒரு நாளில் குர்ஆனில் ஒரு பாரா (ஜுஸ்) கூட முடிக்காதவர், இன்று அமர்ந்து யாஸீன், முல்க், அத்தகாபுன் என ஓதிக் கொண்டேபோவார். எங்கே முழுக்குர்ஆனையும் முடித்துவிட்டுதான் எழுவாரோ எனத்தோன்றும்.

அவரிடம் என்னாயிற்று? எனக் கேட்டால் ஒரு பிரச்சனை. அது தூரமாக அல்லாஹ்விடம் துஆ செய்யுங்கள் எனக் கூறுவார். ஆகையால் சில சமயம் பிரச்சனைகள் அல்லாஹ்வை நினைவுக் கூர்வதற்கான காரணமாகிவிடுகிறது. தவறென்று தெரிந்ததும் அல்லாஹ்விடம் திரும்புகிறான். உணர்ந்து மன்னிப்பு கேட்கிறான். பிறகு அல்லாஹ் அவனை மன்னித்து அவனது பிரச்சனைகளை தூரமாக்குகிறான். ஆகையால் இதுவும் ரஹ்மத்தாகி விடுகிறது.

# பாவத்தின் இரண்டாவது தண்டனை தஃகீர்

பாவத்தின் மூன்று வகையான தண்டனைகளில் நகீர்-அதாவது உடனடியாக தண்டனை கிடைப்பது என்றால் என்னவென்று பல உதாரணங்களுடன் பார்த்தோம்.

**இரண்டாவது தஃகீர்**

பாவத்தினால் ஏற்படும் பிரச்சனைகளுக்கு இன்னொரு முகமும் உண்டு. அதை தஃகீர் என்பார்கள். (தஃகீருடைய அர்த்தம் என்னவென்றால் கால தாமதம் செய்வது) இதில் அல்லாஹ், உடனே தண்டனையை கொடுத்து விடமாட்டான். திருந்துவதற்கு வாய்ப்பைக் கொடுத்து, விட்டுப் பிடிப்பான். நீ எதை செய்ய வேண்டுமோ அதைச் செய்து கொண்டே இரு, நாமும் உனக்கு தேவை யான எல்லாவற்றையும் ஏற்பாடு செய்து தருகிறோம் என்று கூறுவான்.

எப்பொழுது அல்லாஹ் வாய்ப்பை ஏற்படுத்தித் தருவானோ அப்பொழுது அம் மனிதன் அதிகமான பாவங்களில் ஆழ்ந்து மூழ்கி விடுவான். அளவிற் கதிகமான பாவங்களில் அவன் முழ்கிவிடும் போது அல்லாஹ்வின் தண்டனை அவனை திடீரென பிடிக்கும். இது முதல் தண்டனையான நகீரை விட பெரிய தண்டனை, மிகப்பெரும் தண்டனையாகும்.

**படிப்பினைக்குரிய சம்பவம்**

சிறு வயதில் எங்களது முஹல்லாவில் நடந்த சம்பவம்; எங்களது முஹல்லாவில் ஒரு பெண் இருந்தார். படிக்காதவர். ஆனால் நாவு கொஞ்சம் துடுக்கானது. அல்லாஹ் அவருக்கு ஒரு மகனைக் கொடுத்தான். ஒரு நாள் ஏதோ ஒரு முக்கிய மான வேலையில் இருந்த போது அக்குழந்தை அவரைத் தூக்கச் சொல்லி மிகவும் அடம் பிடித்தது. அழுது கொண்டேயிருந்தது. தாய்க்கோ தன் வேலையை முடிக்க வேண்டும். மகனுக்கோ தன்னைத் தாய் தூக்கி வைத்துக் கொள்ள வேண்டும். பிறகு அப்பெண்மணி தன் மகனை தூக்கி வந்து பாட்டிலில் பால் ஊற்றிக் கொடுத்து விட்டு "அப்படியே தூங்கிவிடு, எழுந்து என் பின்னால் வந்தால் அவ்வளவுதான்" என்று மிரட்டும் பாணியில் சொல்லியவாறே சென்று வேலையைப் பார்க்க ஆரம்பித்து விட்டார்.



**தாயின் சாபமும் கபூலாகும் நேரமும்...**

குழந்தை சிறிது நேரம் பாலைக் குடித்தது. பால் தீர்ந்ததும் எழுந்து அம்மா, அம்மா என்று பின்னால் சுற்ற ஆரம்பித்துவிட்டது. இப்பெண்ணுக்கு கோபம் வந்து விட்டது. அடியானுக்கு கோபம் வரும் போது, தான் என்ன செய்கிறோ மென்றே தெரியாது. இப்பெண்ணும் கோபம் வந்தவுடன் "திரும்ப என் பின்னால் வந்து விட்டாயா? என்று கூறியவாரே தன் மகனுக்கு பத்துஆ (சாபம்) செய்து விட்டார். நீ தூங்கினாயே அப்படியே முழுதாய் தூங்கியிருந்தால் (அதாவது மரணித்துவிட்டால்) நன்றாக இருந்திருக்குமே! என்று கூறிவிட்டார். அந்நேரம் கபூலாகக் கூடிய நேரமாயிருக்க அல்லாஹ் கபூல் செய்துவிட்டான். ஆனால் இங்கு கவனிக்க வேண்டும் குழந்தைக்கு உடனேயே மரணம் வந்து விட வில்லை.

**முன்மாதிரி பிள்ளையாக...**

அக்குழந்தை அனைவரையும் கவரும் அளவிற்கு மிக அழகிய தோற்ற முடையவனாக வளர்ந்தான். மிக அறிவாளியாகத் திகழ்ந்தான். பள்ளி, கல்லூரி எல்லாவற்றிலும் முதல் மாணவராக வந்தார். பிறகு தொழில் செய்து தொழிலதிப ரானார். தொழிலும் மிக நன்றாக போனது. அவரது குணம், நடை முறை பழக்க வழக்கங்கள் எல்லாம் எந்த அளவிற்கு முன்மாதிரியானதாக இருந்ததென்றால் முஹல்லாவில் இருந்த அனைவரும் தங்களது பிள்ளைகளை அல்லாஹ் இவ ரைப் போல் ஆக்கி வைக்க வேண்டுமென துஆ செய்ய ஆரம்பித்து விட்டார் கள். அக்கம் பக்கத்து வீட்டுத் தாய்மார்கள் தங்களது பிள்ளைகளுக்கு அவரை உதாரணம் காட்டி வளர்த்தார்கள்.

**மூன்றே நாட்கள் இருக்கும் போது...**

சரி எல்லாம் நன்றாக போகிறதென அவரது தாய் அவருக்கு மிக அழகிய பெண்ணைத் தேடிப்பிடித்து நிச்சயித்தார். திருமணத்திற்கு மூன்றே நாட்கள் இருக்க வீட்டில் ஏதோ வேலை செய்து கொண்டிருக்கையில் கால் இடறி கீழே விழுந்த அவ்விளைஞன் பிறகு எழவேயில்லை. தனது மகனை இழந்த அத்தாய் அழுதார். அழுது கொண்டே இருந்தார். பைத்தியம் போல தெருக்களில் திரிந்தார்.

**நிஃமத்தை புறக்கணித்தால்...**

(ஹள்ரத் அவர்கள் கூறுகிறார்கள்) நாங்கள் சிறுவர்களாக இருக்கும் போது அப்பெண்ணை பார்த்திருக்கிறோம். பிறகு பெரியவர்களின் மூலம் தெரிய வந்தது. எங்களது முஹல்லாவில் இருந்த ஒரு இறைநேசரின் கனவின் மூலம் அல்லாஹ்

அறிவித்தான். "இப்பெண்ணிற்கு இந்நிலை வந்ததற்கு காரணமென்னவெனில் இப்பெண்ணின் பத்துஆவை நாம் கபூல் செய்து விட்டோம். இவள் அவனின் சிறு வயதில் பத்துஆ செய்தாள். அதை நாம் அப்பொழுதே கபூல் செய்துவிட்டோம். ஆனால் உடனேயே அறுக்காமல் பழத்தை பழுக்கவிட்டு அறுப்பதற்கு தயாரான நிலையிலிருக்கும்போது அறுத்தெரிந்து விட்டோம். அப்பொழுது தான் தெரியும் என்னுடைய எந்த நிஃமத்தை புறக்கணித்தால் என்ன விளைவு ஏற்படுமென்று?"

**சாபமிடாதீர்கள்**

எத்தனை சகோதரிகள் தங்கள் சகோதரர்களை பத்துஆ (சாபம்) செய்திருக்கிறார்கள். எத்தனை தாய்மார்கள் தங்களது குழந்தைகளை பத்துஆ செய்திருக்கிறார்கள். எத்தனை மனைவிமார்கள் தங்களது கணவர்களை பத்துஆ செய்திருக்கிறார்கள். பிறகு ஒரு மூலையில் உட்கார்ந்து அழுவார்கள். யாருக்குத் தெரியும் நமது கோபத்தினால் என்றோ கொடுத்த பத்துஆ இன்று நடக்கும் என்று? ஆக இது முதல் தண்டனையை விட பெரிய தண்டனையாக இருக்கிறது. இதையே தஃகீர் என்று கூறுவார்கள். (ஆகவே சாபம் இடாதீர்கள்.) இதையே இந்த வசனத்தின் மூலம் அல்லாஹ் எச்சரிக்கிறான்.

*"அவர்களுக்கு செய்யப்பட்ட நல்லுபதேசத்தை அவர்கள் மறந்து விடவே அவர்களை சோதிக்கும் பொருட்டு ஒவ்வொரு பொருளின் வாயில்களையும் நாம் திறந்து விட்டோம். (அவர்களுக்கு தேவையானதெல்லாம் அவர்களுக்கு கிடைத்துக் கொண்டேயிருந்தன) அவர்களுக்கு கொடுக்கப்பட்டவைகளைக் கொண்டு அவர்கள் ஆனந்தமடைந்து கொண்டிருந்த சமயத்தில் (நம் வேதனையைக் கொண்டு) அவர்களை திடீரென பிடித்துக் கொண்டோம். அந்நேரத்தில் அவர்கள் செயலற்று விட்டனர்* என்று (அல்குர்ஆன் 6:44).

ஆகவே நண்பர்களே! எம்மனிதன் பாவங்களில் மூழ்கிய வாழ்க்கை வாழ்ந்த போதிலும் அல்லாஹ்வின் நிஃமத்துகள் அவன் மீது மழைபோல பொழிவதை பார்க்கிறானோ அத்தருணம் மிகவும் பயப்படக்கூடிய தருணமாகும். அல்லாஹ்வே! நான் மேலும் மேலும் பாவங்களை செய்துக் கொண்டிருக்கிறேன் ஆனால் நீயோ நிஃமத்துக்களை அள்ளி வழங்கிக் கொண்டே இருக்கிறாய்! எங்கே என்னை எதிலும் மாட்டி விடவில்லையே! எனக்கு வலை விரிக்கின்றாயோ என்று எண்ணி அல்லாஹ்விடம் பாவ மீட்சி பெற வேண்டும்.



# மூன்றாவது வகை தண்டனை குஃப்யதுத் தத்பீர்

இதையும் விட பெரிய தண்டனையாக ஒன்று இருக்கிறது. அதை அல்லாஹு தஆலாவின் "குஃப்யது தத்பீர்" (மறைமுகமான ஏற்பாடு) என்று கூறப்படும். அதாவது பாவம் செய்த அடியான், தான் அனுபவிப்பது அல்லாஹ் தந்த தண்டனை என்று கூடத்தெரியாத அளவு அல்லாஹ் தண்டனையைக் கொடுப்பான்.

**முதுமையில் துயரம்**

உதாரணமாக இளமையில் செய்த தீய செயல்களால் முதுமையில் அவனது மனைவியை அவனுடைய பேச்சு கேளாதவளாக அல்லாஹ் ஆக்கிவிடுவான். பிள்ளைகளோ வளர்ந்ததும் தாயின் பக்கம் இருக்க, அவளோ இவன் பேச்சு கேளாதவளாக இருந்தால் அந்த அடியானின் முதுமைக்காலம் எவ்வாறு கஷ்டமானதாக கழியும் என்று யாருக்கும் சொல்லித்தெரிய வேண்டியதில்லை. இளமையில் தவறு செய்தால் தண்டனை இளமையில் தெரிவதில்லை. இளமையில் செய்த தவறுகளுக்கு முதுமையில் படும் துயரங்களை யாரிடம் சொல்லி அழ முடியும்? இதையே அல்லாஹ்வின் குஃப்யதுத் தத்பீர் என்பார்கள்.

**நோயின் வடிவில்...**

சிலருக்கு ஒரு சில நோய்களைக் கொடுத்து தனது நிஃமத்துக்களை விட்டும் அவர்களை அகற்றிவிடுவான்.

ஒரு பெண்மணி எனக்கு கடிதம் எழுதினார். "ஹள்ரத்! நான் வீட்டில் பல விதமான உணவு வகைகளை செய்வேன், வருகின்ற விருந்தாளிகளுக்கு வித, விதமான உணவுகளை செய்து அடுக்குவேன், ஆனால் நானோ அல்சர் நோயாளி. ஏழு வருடங்களாக வெறும் ஜூஸ் போன்ற நீராகாரங்கள் தாம் எனக்கு உணவு. ரொட்டியின் ஒரு துண்டு கூட எனது வாய் உண்டதில்லை. இவற்றையெல்லாம் சாப்பிட ஆசைப்படுகிறேன். ஆனால் முடியவில்லை என்று எழுதியிருந்தார். ஏழு வருடங்களாக அல்லாஹ் திட உணவுகளை உண்பதற்கான நிஃமத்தை பறித்து விட்டான். ஆனால் அப்பெண் இது தனது குற்றத்திற்கான தண்டனை என்று உணரவேயில்லை.

### பனீ இஸ்ராயீலின் ஆலிம்

பனீ இஸ்ராயீல் கூட்டத்தில் ஓர் ஆலிம் இருந்தார். அவர் ஒரு சில பாவங்களில் முழ்கிவிட்டார். அவர் ஆலிம் என்பதால் அல்லாஹ்வுக்கு பயப்படவும் செய்தார். ஆனால் பாவத்தையும் விடவில்லை. பயந்துக் கொண்டே பாவங்களை செய்தார். ஒரு நாள் துஆ செய்த போது "யா அல்லாஹ்! நான் பாவத்தின் மேல் பாவம் செய்து கொண்டிருக்கிறேன். நீயோ மிகக் கிருபையுள்ளவனாய் இருக்கிறாய். எனது எல்லா நிஃமத்துக்களையும் சலாமத்தாக வைத்திருக்கிறாய்" என்று துஆ கேட்டார்.

அல்லாஹுதஆலா உடனே அவரது மனதில் உதிக்க (இல்ஹாம்) செய்தான். "என்னுடைய அடியானே! நான் உனக்குக் கொடுத்த சில நிஃமத்துக்கள் உன்னை விட்டு உனக்கே தெரியாமல் விலகுகின்றன. நீயோ எதையும் அறியாமல் இருக்கிறாய். உடனே அவர் மிகவும் பரிதவிப்புடன், யா அல்லாஹ்! நான் இப்பாவங்களினால் எந்த நிஃமத்துக்களை விட்டு விலகிவிட்டேன்? என்று கேட்டார். பிறகு அல்லாஹு தஆலா இல்ஹாமின் மூலம் கூறினான். என் அடியானே! எந்நாளிலிருந்து இப்பெரும் பாவத்தில் நீ ஈடுபட ஆரம்பித்தாயோ அந்நாளிலிருந்தே நாம் இரவின் கடைசி பகுதியில் நீ கேட்கும் துஆக்களில் உனக்கிருந்த ஈடுபாட்டை அகற்றி விட்டோம் அறியவில்லையா?!!

### அழுவதும் நிஃமத்தே

அப்பொழுது தான் அவர் யோசித்தார் இத்தனை நாட்களாக துஆ கேட்கும் பொழுது தனக்கு அழுகையே வரவில்லை, ஏதோ துஆ கேட்க வேண்டும் என்ற கடமையில் கேட்டது போன்று தோன்றியது, நாம் அழுகை வராததை தண்டனை என்றே நினைத்ததில்லை. இக்கண்கள் நனைவதும் ஒரு நிஃமத்தே! துஆவின் போது மக்கள் அழுவார்கள். பரிதவிப்பார்கள். ஆனால் ஒரு சிலர் மட்டும் சிலை போல் அமர்ந்திருப்பார்கள். மனதில் ஒரு தாக்கமும் ஏற்படாது. மனது ஏன் மென்மையாக வில்லை, கண்கள் ஏன் குளமாகவில்லை, இது எதனால் என்றால் பாவங்களினால் மனது இறுகிவிடுகிறது. கண்கள் கண்ணீர் விட மறுத்துவிடுகிறது.

யாருக்கு தெரியும் நமக்கு தொழுகையில் தக்பீர் தஹ்ரீமா உடைய பாக்கியம் கிடைக்கவில்லை என்றால் நமது ஏதாவது ஒரு பாவத்தின் காரணமாய் இருக்கலாம் என்று? தினமும் குர்ஆன் ஓத நேரம் கிடைக்கவில்லை என்றால் அது போல் நல்ல அமல்களை விட்டு விலகுகின்றோமோ, அதுவெல்லாம் நாம் செய்த



ஏதாவது பாவத்தின் காரணமாய் இருக்கலாம் என்று?

ஏனென்றால் அல்லாஹ்வுடைய வேதமாகிய குர்ஆனும், தொழுகையும் மற்ற நல்ல அமல்களும் அல்லாஹ் நமக்கு கொடுத்த நிஃமத்துக்களே (அருட்கொடைகள்) ஆகும். அதாவது எதனால் இந்த நல்ல காரியங்கள் நமக்கு தவறுகிறதென்று நமக்கே தெரியாது. இவையெல்லாம் "குஃப்யதுத் தத்பீர்" தண்டனையாகும். நகீர், தஃகீர், குஃப்யதுத் தத்பீர். இம்மூன்று வகைகளில் ஏதாவது ஒரு வகையில் பாவம் செய்த அடியானுக்கு நிச்சயம் தண்டனை கிடைத்து விடுகிறது.

### தண்டனையிலிருந்து தப்பிக்க வழி என்ன?

*எம்மனிதன் தவறிழைத்தானோ அத்தவறுடைய தண்டனையைப் பெற்று கொள்வான். (அல்குர்ஆன் 4:123)*

இதில் யாரும் விதிவிலக்கல்ல. இளைஞன் செய்தால் தான் தண்டனை உண்டு முதியோருக்கு இல்லை, கல்வியற்றவன் செய்தால் தான் தண்டனை உண்டு ஆலிமுக்கு இல்லை, ஆண்கள் செய்தால் தான் தண்டனை உண்டு பெண்களுக்கு இல்லை என்றெல்லாம் இல்லவே இல்லை. ஆசிரியரோ மாணவரோ, ஷைகோ (பீர்), முரீதோ, ஆணோ, பெண்ணோ யாரும் அல்லாஹ்வின் பிடியிலிருந்து தப்பிக்க முடியாது. எனவே இத்தண்டனைகளிலிருந்து தப்பிக்க வேண்டுமெனில் தண்டனை கிடைப்பதற்கு முன்பே மன்னிப்பு கேட்க வேண்டும். இதற்கு வேறு வழியே இல்லை.

ஹள்ரத் ஷஃபி (ரஹ்) கூறுகிறார்கள் மேற் சொல்லப்பட்ட இந்த (4:123) வசனத்தின் மூலம் தெரிவது என்னவென்றால் அடியானுக்கு நிச்சயம் தண்டனை உண்டு, இதிலிருந்து தப்பிக்க ஒரே ஒரு வழிதான் உள்ளது, அது என்னவென்றால், மனிதன், தான் செய்த, செய்கின்ற தவறுகளுக்காக அல்லாஹ்விடம் பாவ மன்னிப்பு (தவ்பா) கேட்டு மன்றாடுவது, அவற்றிலிருந்து முழுதாய் நீங்கிவிடுவது. எப்பொழுது மனிதன் தவ்பா கேட்டு பாவங்களிலிருந்து மீண்டு வருகிறானோ அப்பொழுது அவனது மனது மிக, மிக இலேசாகி விடும். ஒளிமயமாகிவிடும்.

### உள்ளம் இருளடைந்து விட்டதற்கு மூன்று அடையாளங்கள்

தவறுகள் செய்யும் போது மனது கனத்து இருளடைந்து இருக்கும். உள்ளம் ஒளிமயமாக இருப்பதற்கும் உயிரற்று இருளடைந்திருப்பதற்கும் சில அடையாளங்கள் உள்ளன. மனிதனின் மனது மரணித்துவிட்டதென்றால் அதனுள் இருள், அநியாயம், பாவங்கள் என அனைத்தும் குடிகொண்டிருக்கும். தான் அழி

வின் பாதையில் இருக்கிறோமென்று இதிலிருந்து மனிதன் உணர்ந்து கொள்ள வேண்டும். மனது இருளடைந்து இருப்பதை மூன்று அடையாளங் களைக் கொண்டு அறியலாம்.

**முதல் அடையாளம்**

தவறு செய்வதால் மனதில் ஏற்படும் தயக்கம் நீங்கி விடுகிறது. முதலில் மஹ்ரமல்லாதவர்களைப் பார்க்கும்பொழுது மனது தயங்கியது. இப்பொழுது கண் களோடு கண்கள் நேராய்ப் பார்த்து பேசிக் கொள்வார்கள். முதலில் ஹலால் எது, ஹராம் எது என்று பார்த்து பார்த்து செயல்படுவார்கள். அந்த குறுகுறுப்பு, தயக்கம் நீங்கியவுடன் எதையும் பார்ப்பதில்லை. ஆனால் இந்த தயக்கம் தான் மனிதனை பல பாவங்களி லிருந்து தடுக்கிறது.

எனவேதான் "வெட்கம், தயக்கம் உன்னிடம் இல்லையெனில் எதை வேண்டு மானாலும் நாடியதை செய்து கொள்" என்று கூறுவார்கள். எனவே தவறு செய்யும் போது ஏற்படும் வெட்கம், தயக்கம் நீங்கி விடுவது முதல் அடையாளம்.

**இரண்டாவது அடையாளம்**

நற்செயல்கள், வணக்கங்கள் புரிவது பெரும் சுமையாகிவிடும். குர்ஆனை சிறிது நேரம் ஓதினால் களைத்துவிடுவார்கள். இரண்டு ரக்அத் தொழுதால் களைத்து விடுவார்கள். இவ்வாறு இபாதத் செய்வது பெரும் சுமையாக தெரிவது இதயம் இருளடைந்ததற்கான இரண்டாவது அடையாளமாகும்.

**மூன்றாவது அடையாளம்**

அந்த அடியாருக்கு யாரேனும் உபதேசம் செய்தால் அந்த உபதேசமும் தவறாய் தெரியும். யாரும் புரிய வைக்க முடியாது. பல நேரங்களில் தந்தை தனது பிள்ளைகளுக்கு ஏதாவது புரிய வைக்க முயற்சி செய்தால் என்ன ஆகுமென்றே தெரியாது அவ்வளவு கோபப்படுவார்கள். தாய் மகளிடம் ஏதாவது கூறினால் தாயை விட நான்கு மடங்கு அதிகமாகவே மகள் பேசுவார். இன்னும் சொல்லப் போனால் தாய்க்கு இவர்கள் உபதேசம் செய்வார்கள். இதுவே மனது இருளடைந் ததற்கான அடையாளமாகும்.

ஆகையாலேயே இன்றைய இளைஞர்களுக்கு தங்களது தந்தையை சிறி தும் பிடிப்பதில்லை. அவர் கெட்டவற்றை விட்டு தடுக்கிறார். அதை செய், இதை செய்யாதே என்று கூறுகிறார். வீட்டிற்கு சீக்கிரம் வந்துவிடு, நண்பர்களுடன் அதிக நேரம் செலவிடாதே என்கிறார். இவ்வாறு அதிகமாக உபதேசம் செய்வ



தால் அவரைப் பிடிப்பதில்லை. எப்பொழுது உபதேசங்கள் பிடிக்கவில்லையோ அது மனது இருளடைந்ததற்கு அடையாளமாகிறது.

ஆனால் நமது பெரியோர்களின் நிலை எவ்வாறிருந்தது என்றால், ஹள்ரத் உமர் (ரலி) அவர்கள், "எந்த மனிதர் என்னிடம் எனது குறைகளை பரிசாக கொண்டு வருவாரோ அவருக்கு மறுமையின் ஈடேற்றத்திற்காக நான் துஆ செய் வேன்" என்று கூறுகிறார்கள். அவர்கள் எங்கே? நாம் எங்கே?

**உள்ளம் ஒளிமயமாகி இருப்பதன் அடையாளங்கள்**

மனம் இருளடைந்து (உயிரற்று) இருப்பதற்கு சில அடையாளங்கள் இருப்பதைப் போல் மனம் ஒளிமாயமாக (உயிரோடு) இருப்பதற்கும் சில அடை யாளங்கள் உள்ளன.

**முகத்தில் பிரகாசம்**

மனம் ஒளிமயமான நல்லடியார்களின் முகத்தில் ஒருவித பிரகாசத்தைக் காணமுடியும். நிச்சயம் அந்த அக ஒளி, புறத்திலும் தெரியும். வெளிச்சத்தில் பிரதிபலிப்பு தெரிவதைப் போன்று மன ஒளி பெற்றவர்களின் முகத்தில் அந்த ஒளியின் பிரதிபலிப்பு தெரியும்.

**தென்றலின் தழுவல்**

அவ்வடியார்களின் முகத்தைப் பார்த்தீர்களென்றால் நிச்சயம் உங்கள் மனத்திற்கு அமைதியும், மனமகிழ்வும், நிம்மதியும் கிடைக்கும். அல்லாஹ்வின் நல்லடியார்களிடமே அந்த ஒளியும் அமைதியும் இருக்கும் நான் எத்தனை யோ முறை எனது நண்பர்களிடம் கூறிவிட்டேன் அல்லாஹ்வின் நல்லடியார் களின் முகத்தைப் பாருங்கள் தென்றலின் தழுவலைப் போன்றிருக்கும்.

**பூனையைப் போல்**

அதே சமயம் இன்றைய பாப் ஸ்டார்களின் முகத்தையும் பாருங்கள், உங்க ளுக்கே தெரியும் வித்தியாசமான அவர்களின் தலைமுடியும், ஒரு விதமான அவர்களின் முகங்களும் நடைகளும், உடைகளும் அவர்களின் பாவனைக ளும், பூனையைப் போல் அரித்துக் கொண்டும் சொறிந்து கொண்டும் இருக் கும். இவர்களைப் பார்த்தவுடனேயே தெரிந்துவிடும் இவர்கள் நிம்மதியற்ற வர்கள் என்று.

மனதில் ஒளியும், முகத்தில் அமைதியும், மகிழ்ச்சியும், பிரகாசமும் நிறைந்

திருப்பது நன்மையின் அடையாளங்களாகும். மேலும் இப்படிப்பட்ட நல்லடியார்களின் வேலைகளுக்கு அல்லாஹ்வே உதவியாளனாகி விடுகிறான். அல்லாஹ் இவர்களை உலக விஷயங்களுக்காக அலைய விடமாட்டான்.

**ரேஸ் குதிரை கழுதை வண்டியிலா?**

நீங்கள் சில குதிரைகளைப் பார்த்திருப்பீர்கள். அவை மிகச் சாதாரணமானவை. இருபது, இருபத்தைந்து ஆயிரத்துக்கு கிடைத்து விடும். இன்னும் நல்ல ஓடக் கூடிய சில குதிரைகளோ லட்சங்களில் விற்கும். சில 15 லட்சம், 50 லட்சம் என விற்கும்.

ஆனால் ரேஸில் போட்டிகளில் ஜெயிக்கக்கூடிய, ரெக்கார்டு (Record) உருவாக்கக்கூடிய குதிரைகள் கோடிகளில் விற்கும். அவற்றை ஸ்பெஷலாக கவனிப்பார்கள். அவற்றின் பெருமையே தனி. இப்படிப்பட்ட ஒரு குதிரையை யாரோ ஒருவர் வந்து, அண்ணே! இதைக் கொஞ்சம் இந்தக் கழுதை வண்டியில கட்டுங்க; என்று கூறினால் அக்குதிரையின் எஜமானன் ஏற்றுக் கொள்வாரா என்ன?

ஏ அல்லாஹ்வின் அடியானே! நான் கோடிக் கணக்கில் விலைக் கொடுத்து வாங்கிய குதிரை, அதுவும் போட்டிகளில் ஜெயிக்கக்கூடிய குதிரை, இதை ஏன் நான் கழுதை வண்டியில் பூட்ட வேண்டும்? என்று, அவர் கேட்பார். எவ்வாறு ஜெயிக்கக் கூடிய குதிரையின் எஜமானன் அதைக் கழுதை வண்டியில் பூட்ட விரும்பமாட்டாரோ, அதைப் போன்று அல்லாஹு ரப்புல் இஸ்ஸத், தனது தீனுடைய வேலை செய்யும், நல்ல நன்மைகள் செய்யும் நல்லடியார்களை துன்யா (உலகம்) என்கிற கழுதை வண்டியில் பூட்ட விரும்பமாட்டான். அவர்களை உலக விஷயங்களுக்காக அலைய விடுவதை அல்லாஹ் நிச்சயம் விரும்பமாட்டான்.

**நம் விருப்பமா? இறை விருப்பமா?**

பரிசுத்த ஹதீஸில் வரும் ஒரு விஷயத்தை மனதின் காதுகளைக் கொண்டு கேளுங்கள்; அதாவது, அல்லாஹ் கூறுகிறான். ஓ! என் அடியானே ஒன்று என்னுடைய விருப்பம், இன்னொன்று உன்னுடைய விருப்பம். நீ உன்னுடைய விருப்பம் நிறைவேற வேண்டுமென்று நினைத்தால் நான் உன் வேலையிலும் உன்னை தளர்த்தி விடுவேன், உன் விருப்பத்தையும் நிறைவேற்ற மாட்டேன். ஆனால் நீ என்னுடைய விருப்பம் நிறைவேற வேண்டுமென



நினைத்தால் என் அடியானே! நான் உனது விருப்பத்தையும் நிறைவேற்றுவேன், உனது உலக விஷயங்களையும் எளிதாக்கி விடுவேன். (என்கிறான் அல்லாஹ்) ஆகையால் உலகில் வாழ மிகவும் எளிதான வழி என்னவென்றால் நாம் அல்லாஹ்வின் விருப்பத்தை நிறைவேற்ற முயற்சி செய்ய வேண்டும். பிறகு அதன் பரக்கத்தை எதிர் பார்க்கலாம்.

**எரிந்தேயாக வேண்டும்**

சிறிது கவனியுங்கள். ஆரம்பத்தில் கூறிய எந்த மனிதன் தவறிழைத்தானோ அத்தவறுடைய தண்டனையை பெற்றுக் கொள்வான். (அல்குர்ஆன் :) என்ற அல்லாஹ்வின் கூற்றிற்கு அர்த்தம் என்னவென்றால் தவறுக்குத் தண்டனை நிச்சயம் கிடைத்தே தீரும் என்பதாகும். என்ன தண்டனை? ஹஸ்ரத் மௌலானா ஷஃபி (ரஹ்) தங்களது தஃப்ஸீரில் எழுதுகிறார்கள் தவறுக்கு தண்டனை நெருப்பில் எரிவது தான். எந்த அடியான் தவறு செய்தாலும் அவன் எரிந்தே தீர வேண்டும். கவனியுங்கள், எந்த அடியான் பெரும்பாவங்களின் பக்கம் இருக்கிறானோ அவன் எரிந்தேயாக வேண்டும்.

ஆனால் இதில் வித்தியாசம் என்னவெனில் ஒன்று அவ்வடியான் கைசேதமென்னும் (தான் தவறு செய்துவிட்டோமே என நினைத்து வருந்துவது) நெருப்பில் எரிய வேண்டும். அவ்வாறு வருந்தும் அடியானை அல்லாஹ் நரக நெருப்பிலிருந்து காப்பாற்றிவிடுவான். மாறாக தனது தவறை எண்ணி, வெட்கமுற்று, வருந்தி, பாவமன்னிப்பு கேட்டு தன்னைத் தானே கைசேதம் எனும் உலக நெருப்பில் எரியவில்லையெனில் அதற்குப் பதிலாக மறுமையில் அவன் நரக நெருப்பில் எரிந்தேயாக வேண்டும்.

ஆகையால் நண்பர்களே! நாம் உலகிலேயே நமது எல்லாப் பாவங்களுக்காகவும், அல்லாஹ்வின் சந்நிதியில் வெட்கமுற்று பாவமன்னிப்பு கேட்டு கைசேதமென்னும் நெருப்பில் எரிய வேண்டும். மனதால் வருத்தப்படுவதும் ஒரு நெருப்புதானே! எந்நேரமும் இவ்வாறு எரிய வேண்டும்.

யா அல்லாஹ்! நான் மிகக் கெட்ட விஷயங்களைச் செய்து விட்டேன். என்னை மன்னித்து விடு. அல்லாஹ்! எனக்கு பாவமன்னிப்பு வழங்கு! என்னை ஏற்றுக் கொள் என்று எந்த அடியான் இவ்வாறு சொல்லிக் கொண்டே இருக்கிறானோ அவனது மனம் அல்லாஹ்வின் பயத்தில் எரிந்துக் கொண்டே இருக்கும்.

ஒன்று இந்த தண்டனை. இல்லையெனில் மறுமையில் நரகத் தண்டனை.

ஆகையால் இன்றே நாம் நமது எல்லாப் பாவங்களுக்காகவும் அல்லாஹ்விடம் பாவ மன்னிப்புக் கோரி கைசேதமென்னும் நெருப்பில் எரிவோமேயானால் இதற்குப் பதிலாக அல்லாஹ் நம்மை நரக நெருப்பிலிருந்து காப்பான்.

முபாரக் கான நேரங்களில், துஆ கபூலாகும் நேரங்களில் நமது கடந்த கால வாழ்வின் பாவங்களுக்காக மன்னிப்புக் கேட்போம். அல்லாஹ்வைத் திருப்தி படுத்துவோம். நம்மை நரக நெருப்பிலிருந்துக் காப்பாற்றிக் கொள்வோம். அல்லாஹ் நமது எல்லா ஹலாலான துஆக்களையும் கபூல் செய்து நரக நெருப்பிலிருந்து நம் எல்லோரையும் காப்பானாக. ஆமீன்! வல்ஹம்து லில்லாஹ்.

## துஆ, பாவமன்னிப்பு கேட்கும் முறை

எனது ஒரு சில நண்பர்கள் அல்லாஹ்வுடைய "அஸ்மாவுல் ஹுஸ்னா" வைக் கொண்டு துஆ கேட்க வேண்டுமென விரும்புகிறார்கள். அல்லாஹு தஆலா கூறுகிறான் : "அல்லாஹுதஆலாவிற்கு மிக அழகிய பெயர்கள் உள்ளன. அவற்றைக் கொண்டு உங்கள் ரப்பிடம் கேளுங்கள்" (அல்குர்ஆன் 7:180) ஆகையால் அந்த அழகிய பெயர்களைக் கொண்டு நாம் அல்லாஹ்விடம் மன்றாடுவோம்.

இதில் முக்கியமான விஷயம் என்னவென்றால் இந்த பெயர்களில் ஒரு பெயரை இஸ்முல் அஃளம் என்று சொல்வார்கள். பரிசுத்த ஹதீஸில் "இஸ்முல் அஃளத்தைக் கொண்டு துஆ கேட்பவரது துஆவை அல்லாஹ் உடனே கபூல் செய்வான்" என்று வருகிறது.

### எது இஸ்முஃல் அஃளம்?

அல்லாஹ்விற்கு அழகிய 99 பெயர்கள் உள்ளன. இப்பொழுது அவற்றில் எந்த பெயர் இஸ்முல் அஃலம் என்பது தெரியாது. "யா ஹய்யு யாகய்யூம் என்னும் திருநாமமே இஸ்முல் அஃளம் என்று ஒரு சிலர் கூறுகிறார்கள்.

"அல்லாஹ்" என்ற பெயர் தான் இஸ்முல் அஃலம் என்று இமாம் அபூ ஹனீஃபா (ரஹ்) கூறுகிறார்கள். ஒரு சிலர் இமாம் அவர்களிடம் ஹள்ரத்! இந்த பெயரைக் கொண்டுதானே ஒவ்வொருவரும் துஆ கேட்கிறார்கள்? என்று கேட்க, இமாம் அவர்கள் : எவருடைய உள்ளம் மாற்றார்களின் அன்பு இல்லாமல் அல்லாஹ்வின் அன்பை மட்டும் கொண்டதாக துய்மையாய் இருக்குமோ அவருடைய துஆவை அல்லாஹ் மறுப்பதில்லை. நமது துஆ கபூலாகவில்



லை என்றால் அதற்கு நமது உள்ளத்தில் எப்போதும் இடம் பெற்றுள்ள மாற்றார்கள் மற்றும் உலகின் மீதுள்ள ஆசையே காரணம். எப்பொழுது மனது எல்லா விஷயங்களையும் விட்டு தூய்மையாக இருக்கிறதோ அப்பொழுது இந்த நாவிலிருந்து வரும் அல்லாஹ் என்ற பெயரைக் கொண்டு கேட்கப்படும் துஆவை அல்லாஹ் ஏற்காமலிருப்பதில்லை என்று கூறினார்கள்.

ஆகையால் அல்லாஹ் என்ற திருப்பெயரைக் கொண்டு துஆ கேட்போம். நன்றாக கேட்போம். திரும்ப திரும்ப கேட்போம். இதில் நோக்கம் என்னவென்றால் அல்லாஹ்வின் திருப்பெயர் அல்லாஹ் என்பது இஸ்முல் அஃளமாக இருக்கும் என்று எண்ணினால் நாம் 99 பெயர்களைக் கொண்டும் துஆ கேட்டால் அந்த ஒரு பெயரும் அவற்றில் வந்தே தீருமல்லவா? இதில் பரக்கத் என்னவென்றால் ஏதாவதொரு பெயர் இஸ்முல் அஃளமாக இருப்பதால் நாம் கேட்கப்படும் துஆ இஸ்முல் அஃளத்தைக் கொண்டு கேட்கப்பட்டதாகிவிடுகிறது. நமது துஆவும் கபூலாகிவிடும் அல்லவா!

ஆகையால் இந்த அடியான் அஸ்மாவுல் ஹுஸ்னா ஓதுவேன். அதாவது எல்லோரும் சிறிது சத்தமாக யா அல்லாஹ் என்று கூற வேண்டும். கண்ணியமிக்க குர்ஆனின் ஆயத்தில் உங்களது அல்லாஹ்வை அழையுங்கள். மெதுவாகவும், சத்தமாகவும், நடுநடுங்கியும் அழையுங்கள் என்று வருகிறது. ஆகையால் இரண்டு வழிகளிலும் அல்லாஹ்விடம் கேட்பதற்கு அனுமதியுண்டு.

இன்று நாம் சிறிது சத்தமாக அல்லாஹ்விடம் துஆ கேட்கலாம். எப்படி ஒரு நிராதரவானவர் எதிலாவது சிக்கிக் கொண்டவர் மற்றவரை அழைப்பாரோ, குரல் கொடுப்பாரோ, உதவி தேடுவாரோ, சத்தம் போட்டு அழைப்பாரோ நாமும் நமது அல்லாஹ்வை சத்தமாக அழைக்கலாம்.

### குழந்தை, தாயை அழைப்பதுபோல்...

ஒரு குழந்தை தன் தாயிடம் அடம் பிடிக்கும் பொழுது அம்மா அம்மா என்று பின்னாலேயே சுற்றும். யார் தன்னைப் பார்க்கிறார்கள் வீட்டில் யார் இருக்கிறார்கள் என்று எதையும் பார்க்காது. அக்கா, தங்கை, தம்பி, அண்ணன், பெரியவர், சிறியவர் என எவர் உட்கார்ந்திருந்தாலும் எல்லோரையும் மறந்து அம்மா அம்மா என அழுதுக் கொண்டே இருக்கும். அதேப் போன்று எல்லாவற்றையும் மறந்து அல்லாஹ் அல்லாஹ் என்று அழைப்போம்.

எப்படி அம்மா அம்மா என்ற அழைப்பில் தாய்க்கு இரக்கம் வருமோ அதேப் போன்று அல்லாஹ் அல்லாஹ் என்ற நமது அழைப்பில் தயாளமும்,

இரக்கமும் அன்பும் நிறைந்த அல்லாஹ்விற்கு நம்மீது நிச்சயம் இரக்கம் வரும். ஆகையால் முதலில் அஸ்மாவுல் ஹுஸ்னா படிப்போம். பிறகு நமது முஸ்லிமான சகோதர சகோதரிகளுக்காகவும் துஆ கேளுங்கள். அல்லாஹுதஆலா நமது துஆக்களை ஏற்று கபூலாக்கட்டும். ஆனால் துஆ கேட்கும் பொழுது நம்மை யாரும் பார்க்கிறார்கள் என்ற எண்ணத்தை அடியோடு மறந்து விட வேண்டும். ஏனென்றால் ஷைத்தானும் நஃப்ஸும் நம் மனதில் உன்னையே எல்லோரும் பார்க்கிறார்கள் என்ற எண்ணத்தை தூண்டுவார்கள்.

## மரண தண்டனை கைதியைப் போல்

எப்பொழுது ஒருவனுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டு விட்டதோ அவன் அழும் பொழுது தன்னை யாரும் பார்க்கிறார்கள் என்று பார்ப்பானா என்ன? அவன் துயரம் அவனுக்கு. ஒரு தாய்க்கு தன் குழந்தை மரணித்து விட்டால் அவள் அழும்போது தன்னைப் பார்க்கிறார்கள் என்றா நினைப்பாள்? அத்தாயின் மனதே கதறும். அதைப்போன்று எந்த அடியான் தன் குற்றங்களை உணர்ந்து பாவ மன்னிப்பு கேட்க விழைகிறானோ அப்பொழுது மற்றவர்களைப் பார்க்க மாட்டான். துஆ கபூலாகக் கூடிய நேரத்தில் தனது அல்லாஹ்வை அழைத்து துஆ கேட்பதில் இருப்பான்.

ஆகையால் சிறிது நேரம் நம்மை மறந்து விட்டு, யார் பேசுவது?, யார் பேசவில்லை?, யார் கேட்பது? யார் கேட்கவில்லை? என்று பார்க்க வேண்டாம். நாம் நமது கைகளைக் கோர்த்து அல்லாஹ்விடம் மன்றாடுவோம். அல்லாஹு தஆலா நம்மை மன்னித்து பாவ மன்னிப்பு பெற்ற அடியார்களில் நம்மையும் சேர்ப்பானாக! நாம் கேட்கும் துஆ மனதிலிருந்து வெளிவந்து நேரடியாக அல்லாஹ்வினுடைய தர்பார் வாசலில் நுழைந்து, ஏற்கப்பட வேண்டும். அப்படிப்பட்ட துஆ கேட்கப்பட வேண்டும்.

## மனதை ஒருமைப் படுத்துவோம்

சிறிது நேரம் மனதை அல்லாஹ்வின் புறம் ஒருமைப் படுத்துங்கள் கண்களை மூடி, தலைகுனிந்து உட்காருங்கள். அல்லாஹ் ரப்புல் இஸ்ஸதின் ரஹ்மத் இறங்கி வருகிறது என்று எண்ணுங்கள். மனதில் அல்லாஹ்வின் ரஹ்மத் நுழைகிறது என்று எண்ணுங்கள். மனதில் இருக்கும் இருளும் அநியாயங்களும் மனதை விட்டு விலகி தூரப்போகிறது என்று எண்ணுங்கள். மனதில் அல்லாஹ் அல்லாஹ் என்று சொல்லுங்கள். தங்களது பாவங்களை நினைவில் கொண்டு பாவமன்னிப்பு கேளுங்கள்.



இயலாத அடியானாகி அல்லாஹ்வின் முன் கையேந்துங்கள். துஆ கேட்க ஆரம்பியுங்கள். அல்லாஹ் ரப்புல் இஸ்ஸத்தின் திருப்பெயர்களை ஓதப் போகிறோம் எவ்வாறு குழந்தை அம்மா அம்மா என்று அழ தாயின் மனது மென்மையாகி இரக்கமடையுமோ அதைப் போன்று நீங்களும் அல்லாஹ்வின் திருப்பெயரை மனதிலிருந்து கூறி இரக்கமுள்ள அல்லாஹ்வின் தர்பார் வாசலைத் தட்டுங்கள்.

## ஹள்ரத் அவர்களின் துஆ ஆரம்பம்

- யா அல்லாஹ்! கொடையான இறைவனே! கொடையை அருள்புரிபவனே! என் இறைவனே உனது வாசலில் உலகில் உள்ள அனைத்து பாதுஷாக்களும் தலைவணங்கி நிற்பார்கள். யா அல்லாஹ்! இந்த ஏழையும், உனது வாசலில் தலை வணங்கி நிற்கிறேன், நீ எங்கள் மீது இரக்கம் காட்டி எங்கள் பாவங்களை மன்னித்து நாங்கள் கேட்கும் துஆவை கபூலாக்கிவிடு.
- லா இலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்
- சுப்ஹானக ரப்பியல் அஃலல் வஹ்ஹாப். அல்லாஹும்ம ஸல்லி அலா ஸய்யிதினா முஹம்மதின் வஅலா ஆலி ஸய்யிதினா முஹம்மதி(ன்) வபாரிக் வஸல்லிம்.
- ஹுவல்லாஹுல்லதீ லாஇலாஹ இல்லாஹு

| | |
|---|---|
| அர்ரஹ்மானு யா அல்லாஹ்! | அர் ரஹீமு யா அல்லாஹ்! |
| அல் மலிகு யா அல்லாஹ்! | அல் குத்தூஸ் யா அல்லாஹ்! |
| அஸ் ஸலாமு யா அல்லாஹ்! | அல் முஃமினு யா அல்லாஹ்! |
| அல் முஹைமினு யா அல்லாஹ்! | அல் அஸீஸ் யா அல்லாஹ்! |
| அல் ஜப்பார் யா அல்லாஹ்! | அல் முதகப்பிரு யா அல்லாஹ்! |
| அல் ஃகாலிகு யா அல்லாஹ்! | அல் பாரிஉ யா அல்லாஹ்! |
| அல் முஸவ்விரு யா அல்லாஹ்! | அல் ஃகஃப்பாரு யா அல்லாஹ்! |
| அல் கஹ்ஹாரு யா அல்லாஹ்! | அல் வஹ்ஹாபு யா அல்லாஹ்! |
| அர் ரஸ்ஸாகு யா அல்லாஹ்! | அல் ஃபத்தாஹு யா அல்லாஹ்! |
| அல் அலீமு யா அல்லாஹ்! | அல் காபிளு யா அல்லாஹ்! |
| அல் பாஸிது யா அல்லாஹ்! | அல் ஃகாஃபிள் யா அல்லாஹ்! |
| அர் ராஃபிஃ யா அல்லாஹ்! | அல் முஇஸ்ஸு யா அல்லாஹ்! |
| அல் முதில்லு யா அல்லாஹ்! | அஸ் ஸமீஉ யா அல்லாஹ்! |
| அல் பஸீர் யா அல்லாஹ்! | அல் ஹகமு யா அல்லாஹ்! |

அல் அத்ல் யா அல்லாஹ்! அல் லத்தீஃப் யா அல்லாஹ்!
அல் கபீரு யா அல்லாஹ்! அல் ஹலீமு யா அல்லாஹ்!
அல் அளீமு யா அல்லாஹ்! அல் ஃகஃபூரு யா அல்லாஹ்!
அஷ் ஷகூரு யா அல்லாஹ்! அல் அலிய்யு யா அல்லாஹ்!
அல் கபீரு யா அல்லாஹ்! அல் ஹஃபீளு யா அல்லாஹ்!
அல் மு(க்)கீது யா அல்லாஹ்! அல் ஹஸீபு யா அல்லாஹ்!
அல் ஜலீலு யா அல்லாஹ்! அல் கரீமு யா அல்லாஹ்!
அர் ரகீபு யா அல்லாஹ்! அல் முஜீபு யா அல்லாஹ்!
அல் வாஸிஃ யா அல்லாஹ்! அல் ஹ(க்)கீமு யா அல்லாஹ்!
அல் வதூது யா அல்லாஹ்! அல் மஜீது யா அல்லாஹ்!
அல பாயித் யா அல்லாஹ்! அஷ் ஷஹீது யா அல்லாஹ்!
அல் ஹக்கு யா அல்லாஹ்! அல் வகீலு யா அல்லாஹ்!
அல் கவிய்யு யா அல்லாஹ்! அல் ம(த்)தீனு யா அல்லாஹ்!
அல் வலிய்யு யா அல்லாஹ்! அல் ஹமீது யா அல்லாஹ்!
அல் முஹ்ஸீ யா அல்லாஹ்! அல் முப்திஉ யா அல்லாஹ்!
அல் முயீது யா அல்லாஹ்! அல் முஹ்யீ யா அல்லாஹ்!
அல் முமீ(த்)து யா அல்லாஹ்! அல் ஹய்யு யா அல்லாஹ்!
அல் கய்யூம் யா அல்லாஹ்! அல் வாஜிது யா அல்லாஹ்!
அல் மாஜிது யா அல்லாஹ்! அல் வாஹிது யா அல்லாஹ்!
அல் அஹது யா அல்லாஹ்! அஸ் ஸமது யா அல்லாஹ்!
அல் காதிரு யா அல்லாஹ்! அல் முக்ததிரு யா அல்லாஹ்!
அல் முகத்திம் யா அல்லாஹ்! அல் முஅஃகிரு யா அல்லாஹ்!
அல் அவ்வலு யா அல்லாஹ்! அல் ஆஃகிரு யா அல்லாஹ்!
அல் பாத்தினு யா அல்லாஹ் அள் ளாஹிரு யா அல்லாஹ்!
அல் வாலீ யா அல்லாஹ்! அல் மு(த்)த ஆலி யா அல்லாஹ்!
அல் பர்ரு யா அல்லாஹ்! அத்தவ்வாபு யா அல்லாஹ்!
அல் முன்யிம் யா அல்லாஹ்! அல் முன்தகிமு யா அல்லாஹ்!
அல் அஃபுவ்வு யா அல்லாஹ்! அர் ரவூஃப் யா அல்லாஹ்!
மாலிகுல் முல்க் யா அல்லாஹ்! துல் ஜலாலி வல் இக்ராம் யா அல்லாஹ்!
அர் ரப்பு யா அல்லாஹ்! அல் முக்ஸிது யா அல்லாஹ்!
அல் ஜாமிஃஉ யா அல்லாஹ்! அல் கனிய்யு யா அல்லாஹ்!
அல் முஃக்னீ யா அல்லாஹ்! அல் முஃதீ யா அல்லாஹ்!
அல் மானிஃஉ யா அல்லாஹ்! அள்ளார்ரு யா அல்லாஹ்!



அந்நாஃபிஉ யா அல்லாஹ்! அந் நூரு யா அல்லாஹ்!
அல் ஹாதீ யா அல்லாஹ்! அல் பதீஉ யா அல்லாஹ்!
அல் பாக்கீ யா அல்லாஹ்! அல் வாரிஸு யா அல்லாஹ்!
அர் ரஷீது யா அல்லாஹ்! அஸ் ஸஃபூரு யா அல்லாஹ்!
யா அல்லாஹ்! யா அல்லாஹ்!

*ஒ ரப்பனா ஆதினா ஃபித்துன்யா ஹஸனதன் வஃபில் ஆஃகிரத்தி ஹஸனதன் வகினா அதாபன்னார்*

*ஒ ரப்பனா ழலம்னா அன்ஃபுஸனா வ இல்லம் தஃக்ஃபிர்லனா வதர்ஹம்னா லன கூனன்ன மினல் ஃகாஸிரீன்.*

ஒ யா அல்லாஹ்! உன்னுடைய அடியார்களாகிய நாங்கள் வெளிப்படையில் நல்லவர்களாகவும் உள்ளுக்குள் உண்மையில் கேடுகெட்டவர்களாகவும் அசிங்கமானவர்களாகவும் இருக்கிறோம்.

ஒ யா அல்லாஹ்! உள்ளுக்குள் உள்ள கேடு கெட்ட தனத்தையும் அசிங்கத் தையும் எங்களைவிட்டு தூரமாக்கிவிடு! எங்கள் மனதில் உள்ள அநியாயங் களையும், மனதின் கடினத்தையும் தூரமாக்கிவிடு!

ஒ யா அல்லாஹ்! எங்களது இதயங்களை மென்மையாக்கிவிடு. எங்களது இதயங்களை ஒளிமயமாகவும் எங்களது இதய உலகத்தை உனது நினைவு களினாலும் நிறையச் செய்து விடு!

ஒ யா அல்லாஹ்! எங்களது பார்வைகளையும் இதயங்களையும் தூய்மையாக் கிவிடு! எங்களது நெஞ்சங்களை உனது அன்பால் நிறைத்துவிடு! உனது ஒவ்வொரு கட்டளைகளையும் நாங்கள் நிறைவேற்ற உதவி செய்தருள்! எங் களது ஒவ்வொரு உறுப்புகளையும் உனது திக்ரில் திளைத்திருக்கவை! அணுவிலும், எலும்பிலும், சதையிலும், ரத்தத்திலும் உனது திக்ரை ஓட விடு! எங்களின் மனதில் உனது முழுமையான அன்பைத் தந்தருள்புரிவாயாக!

ஒ யா அல்லாஹ்! எங்களது கல்வியிலும், அமல்களிலும், ரிஸ்க்கிலும் ஆரோக் கியத்திலும், வேலைகளிலும் எங்களது ஆரம்பத்திலும் முடிவுகளிலும் பரக் கத்தை தந்தருள்புரிவாயாக!

ஒ யா அல்லாஹ்! பிரச்சனையான இக்கட்டான நேரங்களில் அழகிய முடி வெடுக்கும் சாமர்த்தியத்தை எங்களுக்கு வழங்குவாயாக!

ஒ யா அல்லாஹ்! நாங்கள் பகலிலும், இரவிலும், கூட்டத்திலும், தனிமையிலும் செய்த குற்றங்களை மன்னித்து விடு!

ஒ யா அல்லாஹ்! எங்கள் நினைவுகளில் உள்ள பாவங்களையும் நாங்கள் செய்துவிட்டு மறந்துவிட்ட பாவங்களையும் மன்னித்துவிடு!

ஒ யா அல்லாஹ்! எங்களை கெட்ட பகலை விட்டும், கெட்ட இரவை விட்டும், கெட்ட வேலைகளை விட்டும் கெட்ட முடிவுகளை விட்டும் பாதுகாத்தருள் வாயாக!

ஒ யா அல்லாஹ்! நேர்வழி பெற்றபின் கேடுகெட்ட தவறான தவறான வழியில் செல்வத்தை விட்டும் பாதுகாப்பாயாக! கண்ணியம் கிடைத்தபின் இழிவடை வதிலிருந்து பாதுகாப்பாயாக!

ஒ யா அல்லாஹ்! உனது நெருக்கம் கிடைத்த பின் உன்னைவிட்டு தூரமாகு தலை விட்டும் பாதுகாப்பாயாக!

ஒ யா அல்லாஹ்! கல்வியறிவு கிடைத்தபின் அறிவின்மையை விட்டும் பாது காப்பாயாக!

ஒ யா அல்லாஹ்! வழி மாறுதலை விட்டும் ஷைத்தானின் வலைகளை விட் டும், நண்பனென்று கூறிவரும் விஷமிகளை விட்டும் எங்களை காப்பாயாக!

ஒ யா அல்லாஹ்! உனது ரஹ்மத்தின் குளிர்ச்சியான நிழலை எங்கள் மீது விழ வைப்பாயாக!

ஒ யா அல்லாஹ்! எங்களது வருங்காலத்தை சென்ற காலத்தை விட சிறப் பாக்கி வைப்பாயாக!

ஒ யா அல்லாஹ் எங்களது தொழுகையில் மன ஓர்மையைத் தருவாயாக! எங் களது சஜ்தாவில் மகிழ்ச்சியைக் கொடு! பரிசுத்த குர்ஆனை ஓதும்போது இன் பத்தைக் கொடு! இரவின் கடைசிப் பகுதியான தஹஜ்ஜுத்தின் துஆ வில் ஈர்ப்பைக் கொடு! எங்களது ஈமானின் உறுதியை அதிகமாக்கு.

ஒ யா அல்லாஹ்! குழந்தைகளுக்கு பிரச்சனை என்றால் தாய் தந்தையரிடம் செல்வார்கள்.

ஒ யா அல்லாஹ்! உனது அடியார்களுக்கு பிரச்சனை என்றால் உன் புறமே திரும்புவார்கள். இரக்கத்தின் நாயனே! உடைந்த இதயங்களின் ஆறுதலே! ஒன்றுமில்லாத வெறுமையான எங்களது மடிகளை நிரப்புபவனே. குற்றம் புரிந்த குற்றவாளிகளான எங்களின் மீதும் ரஹ்மத்தின் போர்வையை போர்த்துபவனே, யா அல்லாஹ்! நாங்கள் கைகளை ஏந்திவிட்டோம். உனது ரஹ்மத்தைக் கொண்டு அதை நிரப்பம் செய்வாயாக.

ஒ யா அல்லாஹ்! உனது அடிமைகளான எங்களுக்கு முறையாக துஆ கேட்கவும்



தெரியாது. ஆகையால் நாங்கள் கேட்காமலேயே எங்களுக்குக் கொடுப்பாயாக.

ஒ யா அல்லாஹ் இந்த துஆவில் உன்னிடம் நாங்கள் உன்னையே கேட்கிறோம். உனது நெருக்கத்தைக் கொடுப்பாயாக! உனது அன்பைக் கொடுப்பாயாக.

ஒ யா அல்லாஹ் எங்கள் மீது இரக்கம் காட்டு! கருணைக் காட்டுவாயாக.

ஒ யா அல்லாஹ் ஒரு தாய் தன் குழந்தை நஜீஸால் சூழப்பட்டு அசுத்தமாகி விட்டால் அதை வெறுத்து விட மாட்டாள். அதைத் தூக்கி எறிந்துவிட மாட் டாள். அவளுக்கு தெரியும். அக்குழந்தையினால் எதுவும் செய்ய இயலாது. என்ன செய்தாலும் அது என் குழந்தை என அதைக் குளிப்பாட்டி நெஞ் சோடு அணைத்துக் கொள்வாள்.

ஒ யா அல்லாஹ் நாங்களும் பாவம் எனும் நஜீஸால் அசுத்தமாகி கிடக்கி றோம். ஆனாலும் நாங்கள் உனது அடியார்களாவோம். யா அல்லாஹ்! எங் களை வெறுத்து விடாதே.

ஒ யா அல்லாஹ்! உனது பார்வையில் எங்களைத் தாழ்த்திவிடாதே!

ஒ யா அல்லாஹ்! உனது வாசலை விட்டு எங்களைத் துரத்தி விடாதே! உனது வாசலை விட்டு விலக்கி விடாதே! யா அல்லாஹ்!

ஒ யா அல்லாஹ்! எங்களின் மீது ரஹ்மத்தான உனது பார்வையைக் கொண்டு பார். உனது ரஹ்மத்தால் எங்களைப் போர்த்திவிடு. உனது ரஹ்மத்துடைய போர்வையில் எங்களை ஒளித்துவிடு.

ஒ யா அல்லாஹ்! எங்களிடம் கருணைக்காட்டு.

ஒ யா அல்லாஹ் எங்களுக்கு உன்னுடைய மஹ்பூப் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் உன்னுடைய வாசலையே காட்டினார்கள். பிறகு கூறி னார்கள். இவ்வாசலை விட்டால் வேறு வாசல் எங்கும் இல்லை என!

ஒ யா அல்லாஹ், உன் வாசலை விட்டு நாங்கள் வேறு எங்கும் செல்ல இயலாது.

ஒ யா அல்லாஹ்! நாங்கள் உன்னிடமே மன்றாட வேண்டும். உன்னையே திருப்திபடுத்த வேண்டும். நீ திருப்திபடாத வரை நாங்கள் மன்றாடிக் கொண்டே இருப்போம்.

ஒ யா அல்லாஹ்! நீ எங்களைக் கொண்டு திருப்தியடை ரஹ்மானே!

ஒ யா அல்லாஹ்! நீ எங்களைக் கொண்டு திருப்தியடை ரஹ்மானே!

ஒ யா அல்லாஹ் நீ எங்களைக் கொண்டு திருப்தியடை ரஹ்மானே! எங்க ளைக் கொண்டு திருப்தி அடைந்து விடு!

- யா அல்லாஹ்| கருணையாளனே, இரக்கமானவனே, திருப்தி அடைந்து விடு. எங்களைப் பொருந்திக் கொள்.
- யா அல்லாஹ்! யா அல்லாஹ்! துன்யாவில் ஒரு சாதாரண ஏழை மிஸ்கின் பெரிய பணக்கார வீட்டின் வாசல் முன் நிற்கும் பொழுது மனதில் பெரிய நம் பிக்கையோடு நிற்பான். இது பணக்கார வீடு இங்கிருந்து நான் வெறுங்கை யோடு திரும்ப மாட்டேன் என.
- யா அல்லாஹ் முழுப் பிரபஞ்சத்தின் மிகப் பெரிய பணக்காரனான உன் வாசல் முன் மிகப்பெரிய நம்பிக்கையுடனும், உறுதியுடனும் எதிர்ப்பார்ப்பு களுடனும் இந்த ஏழை ஃபக்கீர்கள் கை ஏந்துகிறோம். இன்று நாங்கள் வெறுங்கையோடு திரும்ப மாட்டோம்.
- யா அல்லாஹ் எங்களை வெறுங்கையோடு திருப்பிவிடாதே! யா அல்லாஹ் எங்களை வெறுங்கையோடு திருப்பிவிடாதே!
- யா அல்லாஹ் உனது வாசலை விட்டு வெறுமனே எங்களை அனுப்பி விடாதே, எங்களை துரத்திவிடாதே!
- யா அல்லாஹ் ரஹ்மத்தை அருள்புரிவாயாக.
- யா அல்லாஹ்! இந்த துஆவின் பொருட்டால் எங்களை நரகத்தைவிட்டும் பாதுகாத்தருள். எங்களது தெளபாவை ஏற்றுக் கொள்.
- யா அல்லாஹ் நாங்கள் இரவிலும், பகலிலும், கூட்டங்களிலும், ஒளிந்து ஒளிந்து பாவங்களைப் புரிந்து விட்டோம். இப்பாவங்களின் இருளினால் எங்களது மனம் இறுகிவிட்டது. அல்லாஹ் இப்பொழுது எங்களை விட்டும் இவ்வி ருளை நீக்கிவிடு. எங்கள் மனதை மென்மையாகவும் ஒளிமயமாகவும் ஆக்கி விடு. எங்களின் மௌலா! இரக்கத்தோடு எங்களைப் பார்ப்பாயாக. அல்லாஹ் உனது ஒரே ஒரு பார்வை எங்களது வாழ்வின் கேள்விகளுக்கு பதிலாகும். ரஹ்மத்தான ஒரு பார்வையை பார்த்து விடு. எங்கள் வாழ்வு நேர் வழியில் திரும் பிவிடும். எங்களை மன்னித்து விடு. எங்கள் பிரச்சனை களைத் தீர்த்து விடு. எங் களின் நிம்மதியற்ற வாழ்க்கையை அமைதியாக நிம்மதியான வாழ்க்கையாக்கி விடு. இறையச்சமுடைய, பரிசுத்தமுடைய வாழ்க்கையாக ஆக்கிவிடு.
- யா அல்லாஹ்! எங்களது வீட்டிலும், வெளியிலும், வேலைகளிலும், உடல் ஆரோக்கியத்திலும் உள்ள பிரச்சனைகளைத் தீர்த்து விடு.
- யா அல்லாஹ்! எவர் வாரிசிற்காக ஏங்குகிறாரோ அவர்களுக்கு நல்ல வாரி



சுகளைக் கொடுத்தருள்வாயாக. எவருக்கு குழந்தைகளை கொடுத்திருக் கிறாயோ அக்குழந்தைகளை நல்லவர்களாகவும் பெற்றோரின் கண் குளிர்ச் சியாகவும் ஆக்கி வைப்பாயாக. அவர்களின் வருங்காலத்தை ஒளிமயமாக ஆக்கி வைப்பாயாக.
- யா அல்லாஹ்! அவர்களுக்கு பெற்றோரின் கடமைகளை நிறைவேற்று வதை சுலபமாக்கி தந்தருள்வாயாக.
- யா அல்லாஹ்! ஒரு சில பெண் பிள்ளைகள் கல்வி கற்கவும், ஜமாஅத்தி லும் கலந்து கொள்ள வர இயலாமல் உள்ளனர்.
- யா அல்லாஹ்! உனக்குத் தெரியும், அதற்கு காரணம் பெற்றோரின் பயமே என்று.
- யா அல்லாஹ்! பெண் பிள்ளை என்ற நிஃமத் எந்நேரத்திலும் எல்லோரை யும் விட உதவியாய் இருக்கும். அல்லாஹ் அப்பிள்ளைகளை எல்லாவித தீங்கை விட்டும் பாதுகாத்தருள். அவர்களின் வருங்காலத்தை நன்றாக ஆக்கிவை.
- யா அல்லாஹ்! பெற்றோர்களை பிள்ளைகளின் கவலையை விட்டும் அவர் களின் அநியாயங்களை விட்டும் அவர்களின் பிரச்சனைகளை விட்டும் பாதுகாத்தருள்.
- யா மாலிக்! நாங்கள் எங்கள் பிள்ளைகளை படிப்பதற்காகவும், வேலை செய் வதற்காகவும் வீட்டிலிருந்து அனுப்பி விடுகிறோம். அவர்களிடமிருந்து நாங் கள் தூரமாகி விடுகிறோம் ஆனால் நீயோ மிக அருகில் இருக்கிறாய்!
- யா அல்லாஹ்! அவர்களின் உயிரையும், ஈமானையும், மானத்தையும் பாது காத்தருள்வாயாக!
- யா அல்லாஹ்! அவர்களை நேர்வழியில் இருக்கச் செய்!
- யா அல்லாஹ்! உலகின் இறுதி நாள் வரை வரும் சந்ததிகளுக்கு ஹிதா யத்தைக் கொடு!
- யா அல்லாஹ்! இந்நகரம் முழுதும் உனது சிறப்பான ரஹ்தமத்தை இறக் கிவை. இங்கு அமர்ந்திருக்கும் ஈமானுடைய எல்லா ஆண் பெண்களின் நல்ல தேவைகளை நிறைவேற்றிவை. எவர் இங்கு வர விருப்பமிருந்தும் வர இயல வில்லையோ அவர்களின் தேவைகளையும் நிறைவேற்றிவை!
- யா அல்லாஹ்! எங்களை மன்னித்தருள் புரிவாயாக!
- யா அல்லாஹ்! உனது மஹ்பூப் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

அவர்கள் கூறினார்கள் ரமளானுடைய இரவில் ஆடுகளின் முடியின் அளவு நரகவாசிகள் நரகிலிருந்து விடுவிக்கப்படுவார்கள் என்று.

☞ யா அல்லாஹ்! எங்களையும் அதில் ஒருவராக்கு. எங்களையும் காப் பாற்று! அல்லாஹ் நாங்கள் கண்ணியமிக்க ஹதீஸில் படித்திருக்கிறோம். ஹள் ரத் ஜிப்ரயீல் (அலை) பத்துஆ (சாபம்) செய்தார்கள். எவர் ரம்ளானுல் முபாரக் கைப் பெற்றும் தனக்கு பாவமன்னிப்பு தேடவில்லையோ அவர் நாசமாகட் டும் என.

☞ யா அல்லாஹ்! இன்று நீ எங்களை மன்னிக்கவில்லையானால் எங்களது அழிவில் எந்தவொரு சந்தேகமும் இல்லை.

☞ யா அல்லாஹ்! உனது அன்பர் மஹ்பூப் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இந்த பத்துஆவிற்கு ஆமீன் கூறியிருக்கிறார்கள்.

☞ யா அல்லாஹ்! காப்பாற்றி விடு! உனது மஹ்பூபுடைய பத்துஆவிலிருந்து எங்களைக் காத்துவிடு.

☞ யா அல்லாஹ்! இரக்கம் காட்டி விடு. இன்று மன்னித்து விடு.

☞ யா அல்லாஹ்! முதலிலேயே நாங்கள் பாவங்களால் நிரம்பியிருக்கிறோம். இதில் மேலும் உனது அன்பரின் பத்துஆவும் சேர்ந்து விட்டால் எங்கள் நிலை என்னவாகும்? அல்லாஹ்! இரக்கம் காட்டுவாயாக! இன்று மன்னித்து விடு. இன்றே மன்னித்து விடு. உனது அடியார்களைக் காப்பாற்றி விடு. உனது பாவம் புரிந்த அடியார்களைக் காத்துவிடு!

☞ யா அல்லாஹ்! நாங்கள் அநியாயக்காரர்களாகவும், வரம்பு மீறுபவர்களாக வும் இருக்கிறோம் என உன்னிடமே கூறுகிறோம். அல்லாஹ்! மன்னித்து விடு! எங்களின் மாலிக்கே! எங்களை காப்பாற்றி விடு! நரக நெருப்பிலிருந் தும், உன் தண்டனையிலிருந்தும் காப்பாற்றிவிடு!

☞ யா அல்லாஹ்! வெயிலின் அனலைத் தாங்காத நாங்கள் எவ்வாறு நரக அனலைத் தாங்குவோம்? ஆகையால் அல்லாஹ்வே! இன்று நன்மைக ளைச் செய்து வாழும் நாட்களின் வாழ்வாக்கிவை ரஹ்மத்தை இறக்கி வை!

☞ யா அல்லாஹ்! இந்தக் கூட்டத்தில் எத்தனையோ சின்ன சின்ன குழந்தை கள் கூட அழுகின்றன? யா அல்லாஹ்! அக்குழந்தைகளின் கண்ணீரைக் கொண்டு இந்த பாவிகளின் பாவங்களை மன்னித்தருள்! ஒன்றுமறியாத அக்குழந்தைகளின் கண்ணீரைக் கொண்டு இப்பாவிகளின் கண்ணீரை ஏற்றுக்கொள்!



☞ யா அல்லாஹ்! இந்தக் கூட்டத்தில் எத்தனையோ நரை விழுந்தவர்களும் இருக்கிறார்கள். யா அல்லாஹ்! உனது மஹ்பூப் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நீ வெள்ளை முடியுடையவர்களைப் பார்த்து தண்டிக்க வெட்க முறுவாய் என கூறியுள்ளார்கள்.

☞ யா அல்லாஹ்! நாங்கள் முடிகளை வெள்ளையாகவும் உள்ளத்தைக் கருப் பாகவுமாக்கி உன் முன் அமர்ந்திருக்கிறோம். யாரிடம் உள்ளத்தில் உள்ள வற்றைத் திறப்பது? யாரிடம் உள்ளக் கவலைகளைச் சொல்வது?

☞ யா அல்லாஹ்! நீயே உள்ளத்தில் உள்ளவற்றை நன்கு அறிபவன்.

☞ யா அல்லாஹ்! இந்த இருளான இதயத்தை மென்மையாக்கிவிடு. இந்த வெள்ளை முடிகளுக்குப் பதில் எங்களது இதயங்களை வெள்ளையாக்கி விடு. ஒளிமயமாக்கிவிடு! இதில் உன் ரஹ்மத்தை இறக்கிவை! இறைவா! இரக்கம் காட்டு எங்களிடம்!

☞ யா அல்லாஹ்! எங்களின் இந்த துஆவை ஏற்றுக் கொள்!

☞ யா அல்லாஹ்! குர்ஆனை முழுமையாக ஓதி முடிக்கும் பொழுது கேட்கப் படும் துஆ ஏற்றுக் கொள்ளப்படும் என உனது மஹ்பூப் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியிருக்கிறார்கள்.

☞ யா அல்லாஹ்! இன்றைய தராவீஹ் தொழுகையில் ஒரு குர்ஆன் முழுமை யாக ஓதப்பட்டுள்ளது. அல்லாஹ் இந்த பரக்கத்தைக் கொண்டு எங்களை மன்னித்தருள்!

☞ யா அல்லாஹ்! எங்கள் தராவீஹை கபூலாக்கிவை! குர்ஆன் மஜீதை ஓதுபவ ருடைய ஓதுதலையும் கேட்பவரின் கேட்டலையும் கபூலாக்கிவிடு! எல்லோ ரின் நல்ல துஆக்களையும் கபூலாக்கிவிடு! மிக தொலைவில் இருந்து வந்து இந்த மஜ்லிஸில் கலந்து கொண்டவர்களின் துஆக்களை கபூலாக்கி வை! கடிதங்களின் மூலம் துஆ செய்யச் சொன்னவர்களின் துஆக்களையும் ஏற்றுக் கொள்! யா அல்லாஹ்! எங்களின் துஆக்களை கபூல் செய்வாயாக!

☞ யா அல்லாஹ்! உம்மத்தே முஸ்லிமா (முஸ்லிம் சமுதாயத்தினர்) இக்காலத் தில் மிகவும் பிரச்சனைகளால் சூழப்பட்டு இருக்கிறார்கள். இறைவா அவர்க ளின் பிரச்சனைகளை தூரமாக்கி வை! உலகில் எங்கெங்கு இஸ்லாமியர்கள் வாழ்கிறார்களோ அவர்கள் அனைவரின் கஷ்டங்களையும் தூரமாக்கி வை!

☞ யா அல்லாஹ்! இஸ்லாத்தினுடைய மேன்மையை பாதுகாத்தருள்! தஃவத், தப்லீகுடைய வேலைகளை பாதுகாத்தருள்!

ஞ யா அல்லாஹ்! எங்கு அல்லாஹ் அல்லாஹ் என்று அழைக்கப்படுகிறதோ திக்ருடைய மஜ்லிஸ் நடைபெறுகிறதோ அவற்றையும் பாதுகாத்தருள்வாயாக! தீனுடைய வேலை எங்கெல்லாம் நடக்கிறதோ அங்கெல்லாம் அவ் வேலைகளை நீ பாதுகாத்தருள்வாயாக!

ஞ யா அல்லாஹ்! ஹரம் ஷரீஃபை பாதுகாத்தருள்வாயாக!

ஞ யா அல்லாஹ்! உன்னுடைய வீடாகிய ஹரம் ஷரீஃபை மீண்டும் மீண்டும் காணக்கூடிய பாக்கியத்தை தந்தருள்வாயாக!

ஞ ரப்பே கரீம்! இஹ்ராம் அணிந்து உனது வீடு நோக்கி லப்பைக் அல்லாஹுஉம்ம லப்பைக் என்று கூறிச் செல்லும் அந்த பாக்கியவான்களுடன் எங்களையும் சேர்த்து வைப்பாயாக.

ஞ யா அல்லாஹ்! நாங்களும் உன் வீட்டிற்கு வர வேண்டும். உனது வீட்டை தவாஃப் செய்ய வேண்டும். நாங்களும் கஃபாவுடைய துணியை பிடித்துக் கொண்டு துஆ கேட்க வேண்டும். எங்கள் மனதின் ஆசைகளை நிறைவேற்றி வை!

ஞ யா அல்லாஹ்! எங்களுக்கு இந்த பாக்கியங்களைக் கொடுத்தருள் புரிவாயாக!

ஞ யா அல்லாஹ்! எங்களது வம்சாவழியினரை நன்மை செய்பவர்களாக ஆக்கிவை! அல்லாஹ்! எங்களை முகஸ்துதியில் இருந்து காப்பாயாக!

ஞ யா அல்லாஹ்! எங்களின் அமல்களோ உண்மையான அமல்களாக இல்லை. ஏதோ சிறிதளவு செய்கிறோம்.

ஞ யா அல்லாஹ்! அதிலும் முகஸ்துதி வந்து விட்டால் மறுமையில் எங்களின் நிலை என்னவாகும்? அல்லாஹ்! உனது அடியார்களின் மீது ரஹ்மத்தை பொழிவாயாக!

ஞ யா அல்லாஹ்! இறைவனே எங்களின் மன்றாட்டத்தை இன்று ஏற்றுக் கொள். ரப்பே! இன்றே ஏற்றுக் கொள்!

ஞ யா மௌலா! எங்களின் துஆக்களை ஏற்றுக் கொள். எதையெல்லாம் கேட்டோமோ அதையும் கொடுப்பாயாக. எதை கேட்க நினைத்து மறந்து விட்டோமோ அதையும் கொடுப்பாயாக!

ஞ யா அல்லாஹ் எங்களின் நிலை யூசுஃப் (அலை) அவர்களின் சகோதரர்களைப் போன்றது.

ஞ யா அல்லாஹ் அவர்களின் சகோதரர்கள் யூசுஃப் (அலை) நோக்கி திட்டமாக எங்களைக் காண அல்லாஹ் உம்மை மேம்படுத்திவிட்டான். நாங்கள் தாம் தவறிழைத்து விட்டோம் - என மன்னிப்புக் கேட்டனர்.



ஞ யா அல்லாஹ்! அதே போன்று எங்களிடமோ அமல்கள் முழுமையாக இல்லை. ஆனால் அதன் நன்மையை முழுமையாக கேட்கிறோம்.

ஞ யா அல்லாஹ் யூசுஃப் (அலை) அவர்களோ தன் சகோதரர்களை மன்னித்து விட்டார்கள்.

ஞ யா அல்லாஹ்! நீயோ யூசுஃப் (அலை) அவர்களை விடக் கரீமாக இருக்கிறாய். ஆதலால் மன்னித்து விடு!

ஞ யா அல்லாஹ் நீயும் (லா தஸ்ரீப் அலைகுமுல் யவ்ம் - உங்களுக்கு இன்றைய தினம் எந்த குற்றமும் இல்லை) என சொல்லிவிடு. மன்னித்து விடு அல்லாஹ்! எங்களிடம் கருணை காட்டுவாயாக.

ஞ யா அல்லாஹ்! உனது கலாமாகிய குர்ஆன் சாட்சி கூறுகிறது உனது நேசர்களுக்காக இன்னல்லதீன ஃபதனுல் முஃமினீன வல் முஃமீனாத் (நிச்சயமாக ஈமான் கொண்ட ஆண்களையும், ஈமான் கொண்ட பெண்களையும் எவர்கள் துன்புறுத்தினார்களோ பின்னர் தவ்பா செய்யவில்லையோ அவர்களுக்கு நரக வேதனையும், சுட்டெரிக்கும் வேதனையும் உண்டு- 85:10) என்று பாவியான அடியார்களின் விஷயத்தில் சும்ம லம் யதூபு (பின்னர் தவ்பா செய்யவில்லை) எனக் கூறுகிறாய், ஈமான் கொண்டு நல்லமல்கள் செய்தோருக்கு ஆறுகளோடும் சுவனபதி உள்ளது (85-11) என்று கூறுகிறாய்.

ஞ யா அல்லாஹ்! இறை நேசர்களாகிய அவர்களுக்காக திறந்த வாசலை நீ எங்களுக்காகவும் திறந்து விடு. எங்களின் தௌபாவை ஏற்றுக் கொள்.

ஞ யா அல்லாஹ்! யார் உனக்கு இணை வைத்தார்களோ யார் இன்னல் லாஹ ஸாலிஸுஸ் ஸலாஸா (நிச்சயமாக அல்லாஹ் முக்கடவுள்களில் ஒருவனே! 5:73) என்று சொன்னார்களோ மஸீஹுப்னுல்லாஹ் (ஈஸா அல்லாஹ்வின் குமாரர்) என்றும் உஜைரிப்னுல்லாஹ் (உஸைர் அல்லாஹ்வின் குமாரர் 9:30) என்றும் யதுல்லாஹி மஃக்லூலஹ் (அல்லாஹ்வின் கரங்கள் கட்டப்பட்டுள்ளன. 5:64) என்றும் சொன்னார்களோ அல்லாஹு ஃபக்கீர் இன்னல் லாஹ ஃபக்கீர் (நிச்சயமாக அல்லாஹ் ஏழையாவான் 3:181) என்றும் சொன்னார்களோ யா அல்லாஹ்! உன்னை ஃபக்கீர் என்று சொன்ன அவர்களைப் பார்த்து நீ குர்ஆனில் கூறுகிறாய் "அஃபலா யதூபூன இலல்லாஹீ வயஸ்தஃகபிரூனஹு" (அவர்கள் தவ்பா செய்து மீண்டு பிழைபொறுக்க தேடவேண்டாமா? 5:74) என்று யா அல்லாஹ்! அப்படிப்பட்டவர்களை நீ உன்னுடைய

தௌபாவின் பக்கமும் இஸ்திஃக்பாரின் பக்கமும் அழைக்கிறாய். அப்படியானால் உனது அடிமைகளான நாங்களோ உன்னை அஹ்கமுல் ஹாகிமீன் என்றும் ரப்புல் ஆலமீன் என்றும் பர்வர்திகார் என்றும் ஃகனீ என்றும் உறுதியாக நம்புகிறோம். இப்படிப்பட்ட நாங்கள் எங்களின் கைகளை ஏந்தி அமர்ந்திருக்கிறோம் யா அல்லாஹ்! எங்களின் தௌபாவை ஏற்றுக் கொள்! எங்களின் இஸ்திஃக்ஃபாரை ஏற்றுக் கொள்! யா அல்லாஹ் எங்களின் மீது கருணையை பொழிந்துவிடு!

- யா அல்லாஹ்! குர்ஆன் மஜீதில் பகர்கிறாய் வ அம்மஸ் ஸாஃஇல ஃபலா தன்ஹர்" (யாசகம் கேட்பவர்களை புறக்கணிக்காதீர்கள். 93:10) என்று யா அல்லாஹ்! நாங்களும் உனது வாசலின் யாசகர்களாக இருக்கிறோம். எங்களை நீ புறக்கணித்து விடாதே! எங்களின் மௌலா! உன்னிடம் உன்னுடைய கண்ணியத்தின் பொருட்டால், உன்னுடைய ரஹ்மத்தின் பொருட்டால், உனது கொடையின் பொருட்டால், உனது அன்பின் பொருட்டால் கேட்கிறோம்!
- யா அல்லாஹ்! இன்று எங்களை வெறுங்கையோடு திருப்பிவிடாதே! எங்களின் துஆக்களை ஏற்றுக் கொள்! எங்களை மன்னித்து காப்பாற்றி விடு! எங்களின் வருங்காலத்தை இறையச்சமுடைய ஒழுக்கமுடைய வாழ்க்கையாக்கிவை! சுன்னத்தை பின்பற்றுபவர்களாக ஆக்கிவை! எங்களின் உள்ளங்களை பரிசுத்தமானதாக ஆக்கிவை! இறைவா! இறையச்சமுடைய இதயத்தை தந்தருள்புரிவாயாக!
- யா அல்லாஹ்! நன்மையை செய்து நல்லவர்களாக வாழ அருள்புரிவாயாக!
- யா அல்லாஹ்! இங்கு அமர்ந்திருக்கும் அனைவரின் உள்ளங்களையும் ஒளிமயமாக ஆக்கிவை!
- யா அல்லாஹ்! எங்களின் ஈமானைப் பாதுகாத்தருள். வருங்காலத்தின் ஃபித்னாக்களிலிருந்து எங்களைக் காத்தருள்! இறைவா வருங்காலத்தில் என்னென்ன மாற்றங்களும், ஃபித்னாக்களும் வரும் என்று எங்களுக்குத் தெரியாது ரப்பே!
- யா அல்லாஹ்! சிறு பிள்ளை தனது பொருளைப் பாதுகாக்க இயலவில்லையெனில் பெரியோர்களிடம் அதைக் கொடுத்து பாதுகாக்கச் சொல்லும்.
- யா அல்லாஹ்! நாங்களும் எங்களது ஈமானை உனது பாதுகாப்பில் கொடுக்கிறோம்.



- யா அல்லாஹ்! நாங்கள் மிகவும் பலகீனமானவர்கள், எப்பொழுது எங்களுக்கு மரணத்தின் விளிம்பு வருமோ அல்லாஹ் ரப்பே கரீம் ஈமானின் பாதுகாப்போடு இவ்வுலகை விட்டுச் செல்லும் பாக்கியத்தை தந்தருள்வாயாக!
- யா அல்லாஹ்! கருணையோடு எங்களிடம் நடந்துக் கொள்! எங்களின் இறைவனே! மறுமையில் எம்பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கொடியின் கீழ் நிற்கக்கூடிய பாக்கியத்தை தந்தருள்வாயாக! ஹவ்லுல் கவ்ஸர் நீரை உனது மஹ்பூபின் கரங்களால் பருகக்கூடிய பாக்கி யத்தை தந்தருள்வாயக!
- யா அல்லாஹ் தல்ஹா (ரலி) அவர்களுக்காக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இவ்வாறு துஆ செய்தார்கள் மறுமையில் நீயும் தல்ஹா (ரலி) யும் ஒருவரை ஒருவர் கண்டு புன்னகை செய்த வண்ணம் சந்திப்பீர்கள் என்று.
- யா அல்லாஹ்! நாங்கள் நல்லவர்கள் இல்லை யா அல்லாஹ் எங்களின் பாவங்களை நினைத்து வருந்துகிறோம். உனது கட்டளைகளும் நினைவில் உள்ளன. ஆனாலும் இம்மனது பாவங்கள் புரிவதை விடுவதாயில்லை இவ்வாறிருந்தும் கேட்கிறோம் இறைவனே! மறுமையில் நாங்கள் உன் முன் ஆஜராகும் போது நீ எங்களைப் பார்த்து புன்னகை செய்ய நாங்களும் உன்னைக் கண்டு புன்னகைக்க வேண்டும். அந்நேரம் உன்னுடைய குரலில் "யா அய்யத் துஹுன்ன ஃப்ஸுல் முத்ம இன்னஹ் இர்ஜியீ இலா ரப்பிகி ராழியத்தம் மர்ழிய்யா ஃபத்ஃகுலி ஃபீ இபாதி வத் ஃகுலீ ஜன்னத்தி" நிம்மதி பெற்ற ஆத்மாவே! உன் இரட்சகனின் பால் பொருந்திய நிலையிலும் பொருந்திக் கொள்ளப்பட்ட நிலையிலும் திரும்பு, என் அடியார்களில் நுழைந்து என் சுவனத்தில் நுழைந்து விடு. 89:27-30) என்ற சத்தம் கேட்க வேண்டும் என்பது மனதின் தீராத ஆசையாக உள்ளது. அல்லாஹ்வே! இந்நிலையை கியாமத்துடைய நாளில் எங்களுக்கு தந்தருள்வாயாக. இன் னும் மறுமை நாளை எங்களின் வாழ்நாளின் மிகச்சிறந்த சந்தோஷமான நாளாக ஆக்கி வைப்பாயாக!
- யா அல்லாஹ்! அந்நாளில் எங்களை மன்னித்தருள்வாயாக!
- யா அல்லாஹ்! கேள்வி கணக்கின்றி எங்களை சுவர்க்கச் சோலையினுள் பிரவேசிக்கச் செய்வாயாக! அல்லாஹும்ம இன்னா நஸ்அலுகல் ஜன்னஹ் நஊது பிக மினன் நார். அல்லாஹ்! எங்களின் மீது ரஹ்மத்தின் பார்வையை பொழிவாயாக! எங்களின் இந்த துஆக்களை ஏற்றுக் கொள்வாயாக! இனி

வரும் காலத்திலும் நாங்கள் கேட்கும் துஆக்களை ஏற்றுக் கொள்வாயாக! அல்லாஹ் எங்களின் தேவைகளை நிறைவேற்றி, எங்களின் இல்லங்களில் உள்ள பிரச்சனைகளை தூரமாக்குவாயாக.

- யா அல்லாஹ்! இந்த சொற்பொழிவு நடைபெற ஏற்பாடு செய்தவர்கள் அனைவரையும் மன்னித்து ஏற்றுக் கொள்வாயாக! இவ்விடத்தில் பணி விடை செய்தவர்களின் பணிவிடைகளை ஏற்றுக் கொள்வாயாக!
- யா அல்லாஹ்! பெரியோர்களின் மூலம் கேட்டிருக்கிறோம். யா அல்லாஹ்! இபாதத்தின் மூலம் சுவர்க்கத்தை அடையலாம் ஆனால் பணி விடையின் மூலம் இறைவா உன்னையே அடையலாம் என்று.
- யா அல்லாஹ்! பணிவிடையின் மூலம் நீ கிடைப்பாயானால் யா அல்லாஹ்! பணிவிடை செய்த அனைவரையும் உன்னுடையவர்களாக ஆக்கிக்கொள்!
- யா அல்லாஹ்! அவர்களின் பரக்கத்தை கொண்டு ஏழைகளாகிய எங்களையும், உன்னுடையவர்களாக ஆக்கிக் கொள். ரப்பே கரீம்! ரஹ்மத்தை பொழிவாயாக!
- யா அல்லாஹ்! எங்களின் பெற்றோர்கள், ஆசிரியர்கள், ஷைகுகள் அனைவரையும் மன்னித்து விடு!
- யா அல்லாஹ்! யாரை மன்னித்துவிட்டாயோ அவர்களின் நிலையை மறுமையில் இன்னும் உயர்ந்ததாக ஆக்கிவை!
- யா அல்லாஹ்! இன்றைய இரவை மஃபிரத்துடைய இரவாக ஆக்கிவை!
- அல்லாஹ்! கண்ணியமிக்க குர்ஆனிலே கூறுகிறாய்! "குலிக்கல் இன் சானு மின் அஜல் (21:37)" மனிதனுடைய ஃபித்ரத் இயற்கை சுபாவத்தில் அவசரத்தை வைத்து படைத்திருக்கிறாய் என்று, ஆதலால் அவர்களையும் அவசரமாக, சீக்கிரமாக மன்னித்துவிடு.
- யா அல்லாஹ்! கருணை பொழிவாயாக! ரஹ்மத்தை பொழிவாயாக!
- யா அல்லாஹ்! எங்களின் துஆக்களை ஏற்றுக் கொள்!
- யா அல்லாஹ்! எங்கள் மனதின் உள்ளே உள்ள அசிங்கங்களையும், நாங்கள் சொன்ன கோள்களையும், புறங்களையும், எங்களின் அகங்காரங்களையும், முகஸ்துதியையும் மன்னித்து நீக்கிவிடு.
- யா அல்லாஹ்! இவ்விஷயங்கள் எங்களை மிகவும் வருத்துகிறது.
- யா அல்லாஹ் இம் முஸீபத்துக்களை, இந்நோய்களை எங்கள் மனதை விட்டும் நீக்கிவிடு. இன்னும் எங்களின் உள்ளங்களை ஒளிமயமாக ஆக்கிவிடு!



இன்னும் உனது ரஹ்மத்தால் மனதை நிரப்பிவிடு! மறுமையில் உனது மஹ்பூபுடைய மன்றாட்டத்தை எங்களுக்கு நஸீபாக்கிவிடு!

- யா அல்லாஹ்! உன் மீது எங்களுக்கு அன்பைக் கொடுப்பாயாக! உனது அன்பில் எங்களை வாழவைப்பாயாக! உனது அன்பிலே எங்களை மரணிக்கச் செய்வாயாக!
- யா அல்லாஹ்! இவ்வன்புடனேயே மறுமையில் எழச் செய்வாயக! ரப்பே கரீம்! எங்களின் துஆக்களை கபூல் செய்வாயாக! உன்னிடம் எதைக் கேட்டோமோ அதைத் தந்தருள்வாயாக! எதைக் கேட்க நினைத்து மறந்துவிட்டோமோ அதையும் தந்தருள் புரிவாயாக! ஆமீன். ஆமீன். யாரப்பல் ஆலமீன்.

நன்றி : மனாருல் ஹுதா பல்கலை மாத இதழ்.

# அந்நியப் பெண்களைப் பார்ப்பதினால் ஏற்படும் விபரீதங்களும் அதை விட்டு தவிர்ந்து கொள்ளும் வழிமுறைகளும்.

✍ மௌலானா பீர் துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப் தாமத் பரகாதுஹும்

(நபியே!) முஃமினான ஆண்களுக்கு நீர் கூறுவீராக! அவர்கள் தங்கள் பார்வைகளை தாழ்த்திக் கொள்ளவும். தங்களின் மறை விடங்களையும் பாதுகாத்துக் கொள்ளவும். (24:30)

(நபியே!) முஃமினான பெண்களுக்கு நீர் கூறுவீராக! அவர்கள் தங்கள் பார்வைகளை தாழ்த்திக் கொள்ளவும். தங்களின் மறை விடங்களையும் பாதுகாத்துக் கொள்ளவும். (24:31)

மனிதன் மானக்கேடான காரியங்களில் மூழ்கிவிட மூலக் காரணம், அவன் தன்னுடைய பார்வையை கடிவாளமிட்டு கட்டுப் படுத்தாதேயாகும். எனவே தான் கெட்ட பார்வையை உம்முல் கபாயிஸ் - மானக்கேடான பாவங்களின் தாய் என்று மார்க்க விற்பன்னர்கள் கருதுகிறார்கள்.

கண்கள், ஃபித்னா - அசம்பாவிதங்கள் பொங்கிவரும் ஊற்றாக இருக்கின்றன. இந்நிலையில் பெண்கள் நிர்வாணமாக சுற்றித் திரிவது இந்த ஃபித்னாவை மென்மேலும் அதிகப்படுத்தி விடுகிறது.

ஹள்ரத் ஷைகுல் ஹதீஸ் ஜகரிய்யா (ரஹ்) அவர்கள் கூறு கிறார்கள் : கெட்ட பார்வை மிக மோசமான வியாதியாகும். ஆரம்பத்தில் சிலருக்கு திக்ரு செய்வதில் அதிக ஆர்வம் இருக் கும். ஆனால் இந்த கெட்ட பார்வை அந்த ஆர்வத்தையும் வணக்க வழிபாடுகளில் ஏற்படும் இன்பத்தையும் அழித்துவிடு கிறது. பிறகு சிறிது சிறிதாக அவர் நல்ல அமல்கள் செய்வதை முழுமையாக விட்டுவிடுகிறார். (ஆப் பீ(த்)தி பா:2, பக்:418)

ஷைகு வாஸிதி (ரஹ்) அவர்கள் அடிக்கடி கூறுவார்கள், அல்லாஹ் ஒரு மனிதனை கேவலப்படுத்த நாடிவிட்டால் அழகிய முகங்களை பார்க்கும் பழக்கத்தை அவனுக்கு ஏற்படுத்திவிடுவான்.

சீவி சிங்காரித்து கவர்ச்சியாக வலம்வரும் பெண்களும் அவர்களை இச்சையுடன் பார்க்கும் ஆண்களும் அல்லாஹ்வின் சாபத்திற்குரியவர்களாகும். நெருப்புக் குண்டம் சிறிய தீப்பொறி யினால் உருவாகுவதைப் போல் விபரீத குற்றங்கள் கெட்ட பார்வையின் மூலம் உருவாகின்றன. எனவே வெட்கத் தலங்களை பாதுகாக்க பார்வையை தாழ்த்துவது மிக அவசியமாகும்.

நாம் நம்முடைய கண்களுக்கு திரையிடாவிட்டால் நம் உள்ளங்களின் மீது திரை போடப்படும். எச்சரிக்கையாக இருந்து கொள்ளுங்கள்!

தீய பார்வையை விட்டு விலகியிருக்க சில வழி முறைகளை முரீதீன்களுக்கு ஷைகுமார்கள் குறிப்பிடுகிறார்கள்:

1. பாதையில் செல்லும் போது பார்வையை மிகவும் தாழ்த்திக் கொள்ள வேண்டும். அருகில் செல்பவர்கள் ஆணா பெண்ணா என் பதைக் கூட பாதங்களை வைத்து அனுமானித்துக் கொள்ள வேண்டும்.

2. சூப்பர் மார்கெட் மற்றும் டிக்கெட் கவுண்டர் போன்றவற்றில் ஆண் கள் இருக்குமிடத்தை தேர்ந்தெடுக்க வேண்டும். இதனால் பெண்களிடம் பேசும் சந்தர்ப்பம் தவிர்க்கப்படுகிறது.

3. அந்நியப் பெண்களிடம் பேச வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டால் சண்டையிட்டுக் கொண்ட இரு நபர்கள் பேசுவதைப் போல் முகத்தை பார்க்காமல் பேசுங்கள்.

4. சாலை ஓரங்களில் ஒட்டப்பட்டுள்ள சினிமா போஸ்டர்களை பார்க்காதீர்கள்!

5. வாகனத்தில் செல்லும் போது அருகில் செல்லும் வாகனத்தில் அமர்ந்துள்ள பெண்களின் பக்கம் கவனத்தை செலுத்தாதீர்கள்!

6. தம் வீடாக இருந்தாலும் அந்நியப் பெண்கள் உள்ளே இருக்கும் போது அவர்கள் தங்களை மறைத்துக் கொள்ள வேண்டும் படி முன்னெச்சரிக்கை செய்த பின் நுழைய வேண்டும்.

7. அடுத்தவர் வீட்டிற்கு சென்றால் வாசலுக்கு நேராக நிற்கக் கூடாது.

8. ஆண்களும் பெண்களும் கலந்திருக்கும் கூட்டங்களுக்கு அறவே செல்லாதீர்கள்! பெண்கள் நடமாட்டம் இல்லாத பாதையில் செல்லுங்கள்!

9. சுற்றுலாத் தலங்களுக்கு செல்லாதீர்கள்! அப்படி செல்வதாக இருந் தால் மற்றவர்கள் செல்லாத நாளை தேர்ந்தெடுத்து அந்நாளில் செல்லுங்கள்.

10. பஸ், ரயில், விமானம் போன்றவற்றில் பிரயாணம் செய்யும் போது மார்க்க நூல்களை எடுத்துச் சென்று அதை படித்தபடி நேரத்தை கழியுங் கள்! இல்லையெனில் பிரயாணம் செய்யும் பெண்கள் மீது பார்வை படும்.

11. பெண்களின் படம் அல்லது டி.வி. பொருத்தப்பட்டுள்ள பஸ், ரயில், நிலையங்களிலும் தங்கும் விடுதிகளிலும், அலுவலகங்களிலும் அந்த திசையில் முதுகை காண்பித்து அமருங்கள்!

12. தேவையின்றி இன்டர்நெட் - இணைய தளத்தை பயன்படுத் தாதீர்கள்!

13. மாற்று மதத்தார் அதிகம் வசிக்கும் பகுதிகளுக்கு சென்றால் யாருடைய முகத்தையும் பார்க்காதீர்கள்.! ஏனெனில் கோடை காலங் களில் அவர்கள் தங்கள் மேனிகளில் அதிகமான பகுதிகளை திறந்தே வைக்கின்றனர். குளிர் காலங்களில் ஆடை அணிந்திருந்தாலும் ஆண் கள், பெண்களுக்கு மத்தியில் வித்தியாசம் இல்லாத அளவிற்கு பெண்கள் ஆண்களைப் போன்று முடிவெட்டிக் கொண்டு கோட் அணிந்து டைய்

மாட்டிக் கொண்டு வலம் வருகின்றார்கள். இந்த முஸீபத்திலிருந்து தப்பித்து நம் ஈமானை பாதுகாக்க பார்வையை தாழ்த்துவதைத் தவிர வேறு வழியில்லை.

14. வீட்டில் தனியாக ஒருபோதும் இருக்காதீர்கள்! எந்த வேலையுமின்றி சும்மாவும் இருக்காதீர்கள்!

15. பெண்களின் ஸ்கூல் மற்றும் காலேஜ் இருக்கும் தெருவில் செல்வதை விட்டு விடுங்கள்!

16. திருமணமாகிவிட்டால் தன் மனைவியை சந்தோஷமாக வையுங்கள்!

17. கஃபாவை தவாஃப் செய்யும் போது பாதங்களை பார்க்கும் வண்ணம் பார்வையை தாழ்த்திக் கொள்ளுங்கள்! கண்டிப்பாக பார்வையை உயர்த்தாதீர்கள்!

18. அந்நியப் பெண்களை பார்ப்பதினால் கிடைக்கும் தண்டனைப் பற்றி அடிக்கடி சிந்தியுங்கள்! அந்நியப் பெண்களை பார்த்தவனின் கண்களில் கண்ணாடியை உருக்கி மலக்குமார்கள் ஊற்றுவார்கள். சூடாக்கப்பட்ட கூர்மையான கம்பிகளை கண்களில் குத்துவார்கள் என்றும் சில கிதாபுகளில் எழுதப்பட்டுள்ளது.

19. அந்நியப் பெண்களை ஒரு முறை பார்த்து விட்டால் இருபது ரகஅத் தொழுவேன் என்ற தண்டனையை நடைமுறைப்படுத்துங்கள்! இன்ஷா அல்லாஹ் சில தினங்களில் பார்வையை தாழ்த்த ஆரம்பித்துவிடுவீர்கள்.

20. ஒவ்வொரு மாதமும் 13,14,15 ஆகிய தினங்களிலும் திங்கள் மற்றும் வியாழக்கிழமைகளிலும் நோன்பு நோற்றுவாருங்கள்! இந்த நோன்புகள் நோற்றும் பார்வையை கட்டுப்படுத்த முடியாவிட்டால் ஹள்ரத் தாவூத் (அலை) அவர்களைப் போல் ஒரு நாள் விட்டு ஒரு நாள் நோன்பு வையுங்கள்!

21. கீழ் காணும் தஸ்பீஹை காலையிலும் மாலையிலும் 100, 100 முறை ஓதுவதை வழமையாக்கிக் கொள்ளுங்கள்.

لا مرغوبی الا اللہ , لا مطلوبی الا اللہ , لا محبوبی الا اللہ , لا الہ الا اللہ

எனக்கு விருப்பமானவன் அல்லாஹ் தான். நான் தேடுவது அல்லாஹ்வைத் தான். எனக்கு பிரியமானவன் அல்லாஹ் தான். வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை.

22. தினமும் தஹஜ்ஜுத் தொழுகைக்காக எழுந்து அல்லாஹ்விடம், யா அல்லாஹ்! பாவங்களை விட்டு தவிர்ந்திருப்பது எனக்கு சிரமமாக இருக்கிறது. ஆனால் பாவங்களில் ஈடுபடாமல் என்னை பாதுகாப்பது உனக்கு லேசான காரியமாகும். எனவே என் இறைவா! என் உள்ளத்தை தூய்மைப்படுத்தி விடுவாயாக! என் பார்வையை பரிசுத்தப்படுத்துவாயாக! என்று துஆ செய்யுங்கள்!

கெட்ட பார்வையை விட்டு விலகி தம் பார்வையை பாதுகாத்துக் கொள்ளும் மனிதருக்கு மறுமையில் இரு வெகுமதிகள் வழங்கப்படும்

1. பார்வையை தாழ்த்திய ஒவ்வொரு முறைக்கும் அல்லாஹ்வை பார்க்கும் பாக்கியம் கிடைக்கும். 2. மறுமையில் அழுவதை விட்டு அந்த கண் பாதுகாக்கப்படும்.

گناہوں کے نقصانات

# பாவத்தின் தீங்குகள்


افادات: حضرت مولانا ذوالفقار احمد نقشبندی مدظلہ العالی

ஹள்ரத் மௌலானா பீர்

**துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப்**

நக்ஷ்பந்தீ, முஜத்தீதி, தாமத் பரகாதுஹுஊம்

தமிழில் : பின்து அப்தில் மஜீத்

(மௌலானா அப்துல் மஜீத் ஹள்ரத்

முஹ்தமிம், மதரஸா காஷிஃபுல் ஹுதா, சென்னை-77.)



Publisher : Mufti Shakeel Ahmed Naqshbandi

E-mail : shakeel.naqshbandi@yahoo.com